॥ ஸ்ரீகணபதயே நம: ॥ 2015

# தெய்வத் துதி மாலை

## ( தமிழ் துதிப் பாடல்கள் )

दैव स्तुति मालै (तमिल)




கீதா பிரஸ், கோரக்பூர்

॥ ஸ்ரீ மஹாகணபதயே நம: ॥ 2015

# தெய்வத் துதி மாலை

## [தமிழ் துதிப் பாடல்கள்]

### दैव स्तुति मालै (तमिल)

---

த்வமேவ மாதா ச பிதா த்வமேவ
த்வமேவ ப$_{3}$ந்து$_{4}$ஶ்ச ஸக$_{2}$ா த்வமேவ ।
த்வமேவ வித்$_{3}$யா த்$_{3}$ரவிணம் த்வமேவ
த்வமேவ ஸர்வம் மம தே$_{3}$வதே$_{3}$வ ॥

ஆருயிர் அன்னையும் நீயே, அருமைத் தந்தையும் நீயே,
உறவும் சுற்றமும் நீயே, உற்ற நண்பனும் நீயே,
கற்கும் கல்வியும் நீயே, சேர்க்கும் செல்வமும் நீயே,
அனைத்தும் ஆன என்றன் ஆதிதேவனும் நீயே!

---

கீதா பிரஸ், கோரக்பூர்

*Books are also available at—*

1. Gita Press Sales Depot
   Gita Press Mansion, 8/1M, Racecourse
   COIMBATORE — 641018
   ✆ 0422-3202521
2. Gita Press Gorakhpur Book Shop
   Electro House N0. 23
   Ramanathan Street, Kilpouk
   CHENNAI — 600010
   ✆ (044) 26615959; Fax 26615909
3. 12, Abhirami Mall, Purasavalkam, Near
   Kilpouk/Veperi, CHENNAI

First Edition 2015 5,000

❖ **Price : ₹ 20**

**( Twenty Rupees only )**

Printed & Published by **:**

**Gita Press, Gorakhpur—273005 (INDIA)**

(a unit of Gobind Bhavan-Karyalaya, Kolkata)

Phone - (0551) 2334721, 2331250; Fax - (0551) 2336997

web : **gitapress.org** e-mail : **booksales@gitapress.org**

**Visit gitapressbookshop.in for online purchase of Gitapress publications.**

2015 Dev Sthuthi Malai (Tamil)_Section_1_Back

॥ ஸ்ரீஹரி: ॥

# நூல் அறிமுகம்

கலியுகத்தில் இறையருளைப் பெற சுலபமானதும் உத்தமமானதுமான மார்க்கம் இறைவன் நாமத்தைத் துதித்து, அவன் புகழைப் பாடி வழிபடுதலேயாகும். இறையருள் பெற்ற ஆன்றோர்களும் சான்றோர்களும் பாடிப் பரவிய தமிழ் துதிப் பாக்களை மனமுருகக் கூறி வழிபடும்போது, அமைதியும் அருளும் கிடைப்பது கண்கூடு. நமது பாரத தேசத்தில் இந்து மதத்தில் ஔவை, நக்கீரர், ஆழ்வார்கள், நாயன்மார்கள், தாயுமானவர், வள்ளலார், அருணகிரிநாதர், அபிராமி பட்டர் போன்ற பக்த மகான்கள் எண்ணற்ற துதிப் பாடல்களைப் பாடி, அனைத்து தெய்வங்கள் மீதும் மனமுருகி வழிபடச் சுலபமான வழியைக் காட்டியுள்ளனர். ஒவ்வொரு நாளும் காலையிலும் மாலையிலும் அப் பாக்களைப் பக்தியுடன் பாடுவதால் துன்பங்கள் விலகி, மனக்கவலைகள் அகன்று, அனைத்து நன்மைகளையும் அடையலாம்.

மேலும், நாம், நாள்தோறும் நமது இஷ்ட தெய்வத்தின் பேரிலோ, குலதெய்வத்தின் மீதோ, ஓரிரு ஸ்தோத்திரங்களையாவது மனப்பாடம் செய்து முழு ஈடுபாட்டுடன் வழிபாடு செய்வதன் மூலம் நமக்கு மேன்மை கிட்டும்.

***'தெய்வத் துதி மாலை'*** என்ற இந் நூலில் கணபதி, முருகன், சிவன், விஷ்ணு, அனுமன், அம்பிகை, லக்ஷ்மி, சரஸ்வதி போன்ற தெய்வங்களைப் பற்றிய ஸ்தோத்திரப் பாடல்கள் தொகுத்தளிக்கப் பட்டுள்ளன. எவ்வித வேறுபாடுமின்றி, எந்த வகுப்பைச் சேர்ந்தவராயினும் பக்தியுடன் நித்தமும் இந்தத் துதிப்பாடல்களைப் பாராயணம் செய்யலாம்.

ஸ்ரீமத் பகவத்கீதை, ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம், அத்யாத்ம ராமாயணம், ஸ்ரீமத் பாகவதம், ஸ்ரீமந் நாராயணீயம் போன்ற மிகச்சிறந்த தெய்விக நூல்களைத் தமிழ் மூலம் – மொழிபெயர்ப்புடன் சீரிய முறையில் மிக மிகக் குறைந்த விலையில் நாங்கள் வெளியிட்டு வருகிறோம்.

தமிழ்கூறு நல்லுலக ஆன்மீகர்களுக்கு இந்நூலைக் காணிக்கையாக்குவதில் மனநிறைவு கொள்கிறோம். இந்நூல் பூஜையறையை அலங்கரிப்பதோடு மட்டுமல்லாது, இதில் காணும் துதிப் பாடல்களை மனமுருகப் பாடுவதால், அவர்களது இல்லங்கள் எல்லா வளங்களும் பெற்று மேன்மையுறும் என்பது திண்ணம்.

மேலும், இந்நூலில் உள்ள ஸ்தோத்திரப் பாடல்களைச் சிறந்த முறையில் வரிசைப்படி தொகுத்து, பிழைத்திருத்தம் செய்து, இந்நூல் மிகச்சிறந்த முறையில் வெளிவர உதவிய சென்னை ***பண்டிட். ஹரிவெங்கட்ராமன்*** அவர்களுக்கு எங்களது நன்றி உரித்தாகுக. சான்றோரது ஆன்மீகத் தொண்டு சிறக்க எல்லாம் வல்ல இறைவன் அருள் மழை பொழியட்டும்.

— ***பதிப்பாளர்கள்***



|| ஸ்ரீ மஹாகணபதயே நம: ||

# பொருளடக்கம்

| வரிசை எண் | பொருள் | பக்கம் எண் |
|---|---|---|

## கணேச ஸ்தோத்திரங்கள்



## சுப்ரமண்ய ஸ்தோத்திரங்கள்

# சிவபெருமான் ஸ்தோத்திரங்கள்

## மகாவிஷ்ணு ஸ்தோத்திரங்கள்



## தேவியர் ஸ்தோத்திரங்கள்

## இதர தேவதா ஸ்தோத்திரங்கள்







|| ஸ்ரீ மஹாகணபதயே நம: ||

# தெய்வத் துதி மாலை

## [தமிழ் துதிப் பாடல்கள்]

## கணேச ஸ்தோத்திரங்கள்

### 1. விநாயகர் துதிப் பாடல்கள்

கணபதி யென்றிடக் கலங்கும் வல்வினை
கணபதி யென்றிடக் காலனுங் கைதொழும்
கணபதி யென்றிடக் கரும மாதலால்
கணபதி யென்றிடக் கவலை தீருமே. 1

பிடியதன் உருஉமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடும் அவரிடர்
கடிகண பதிவர அருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலம்உறை இறையே! 2

வானுலகும் மண்ணுலகும்வாழ மறைவாழப்
பான்மைதரு செய்யதமிழ்ப் பார்மிசை விளங்க
ஞானமத ஐந்துகர மூன்றுவிழி நால்வாய்
ஆனைமுகனைப் பரவி அஞ்சலி செய்கிற்பாம். 3

மண்ணுல கத்தினிற் பிறவி மாசற
எண்ணிய பொருளெலாம் எளிதில் முற்றுறக்
கண்ணுத லுடையதோர் களிற்று மாமுகப்
பண்ணவன் மலரடி பணிந்து போற்றுவோம். 4

ஐந்து கரத்தனை யானை முகத்தனை
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை
நந்தி மகன்தனை ஞானக் கொழுந்தினைப்
புந்தியில் வைத்தடி போற்று கின்றேனே! 5

திருவாக்கும் செய்கருமம் கைகூட்டும் செஞ்சொல்
பெருவாக்கும் பீடும்பெருக்கும் – உருவாக்கும்
ஆதலால் வானோரும் ஆனைமுகத் தானைக்
காதலால் கூப்புவர் தம்கை. 6

அல்லல்போம் வல்வினைபோம் அன்னை வயிற்றிற்பிறந்த
தொல்லைபோம் போகாத்துயரம் போம் – நல்ல
குண மதிகமா மருணைக் கோபுரத்துள் மேவும்
செல்வகண பதியைக் கைதொழுதக் கால். 7

விநாயகனே வெவ்வினையை வேரறுக்க வல்லான்
விநாயகனே வேட்கை தணிவிப்பான் – விநாயகனே
விண்ணிற்கும் மண்ணிற்கும் நாதனுமாம் தன்மையினால்
கண்ணிற் பணிமின் கனிந்து. 8

ஓரானைக் கன்றை யுமையாள் திருமகனைப்
பேரானைக் கற்பகத்தைப் பேணினால் – வாராத
புத்திவரும் வித்தை வரும் புத்திரசம் பத்துவரும்
சத்திதருஞ் சித்திதருந் தான். 9

மங்களத்து நாயகனே! மண்ணாளும் முதலிறைவா!
பொங்குதன வயிற்றோனே! பொற்புடைய ரத்தினமே!
சங்கரனார் தருமதலாய்! சங்கடத்தைச் சங்கரிக்கும்
எங்கள்குல விடிவிளக்கே! எழில்மணியே! கணபதியே! 10

அப்பமுடன் பொரிகடலை அவலுடனே அருங்கதலி
ஒப்பில்லா மோதகமும் ஒருமனதாய் ஒப்புவித்து
எப்பொழுதும் வணங்கிடவே எனையாள வேண்டுமென
அப்பனவன் மடியமரும் அருட்கனியே! கணபதியே! 11

பிள்ளையாரின் குட்டுடனே பிழைநீக்கும் உக்கியிட்டு
எள்ளளவும் சலியாத எம்மனத்தை உமக்காக்கித்
தெள்ளியனாய் தெளிவதற்குத் தீந்தமிழில் போற்றுகிறேன்
உள்ளியதை உள்ளபடி உகந்தளிப்பாய் கணபதியே! 12

இன்றெடுத்த இப்பணியும் இனித்தொடரும் எப்பணியும்
நன்மணியே சண்முகனார் தன்னுடனேநீ எழுந்து
என்பணியே உன்பணியாய் எடுத்தாண்டு எமைக்காக்க
பொன்வயிற்றுக் கணபதியே போற்றியெனப் போற்றுகிறேன். 13

தொழுது நெஞ்சுருகி நாளும் தோத்திரம் புரிவோம் பொங்கி
அழுத கண்ணீரில் மூழ்கி ஆனந்த முத்தொடுப்போம்
எழுததற்கு அரிய யானை எழில் முகன் அடியில் நம்மை
முழுதுமாய் ஒப்படைக்க முந்துவோம் முந்துவோம்! 14

காட்டு வழி போனாலும் கள்ளர் பயம் ஆனாலும்
கேட்டு வழிக் காலனார் கிட்டிடினும் – நாட்டமுடன்
நம்பிக்கை உண்டேல் நமக் கொரு விநாயகர்
தும்பிக்கை உண்டே துணை. 15

அகரமென அறிவாகி உலகமெங்கும்
அமர்ந்தகர உகர மகரங்கள் தம்மால்
பகருமொரு முதலாகி வேறுமாகி
பலவேறு திருமேனி தரித்துக் கொண்டு
புகரில் பொருள் தான் இணையும் இடர் தீர்ந்தெய்தப்
போற்றுநருக் கருணை புரிந்தல்லார்க்கு
நிகரின் மறக் கருணை புரிந்தாண்டு கொள்ளும்
நிருமலனைக் கணபதியை நினைத்து வாழ்வாம். 16



## 2. பிள்ளையார் போற்றி

ஓம் எனும் பொருளாய் உள்ளோய் போற்றி
பூமனும் பொருள்தொறும் பொலிவாய் போற்றி
அகரம் முதலென ஆனாய் போற்றி
அகர உகர ஆதி போற்றி. 1

கற்றவர் விழுங்கும் கனியே போற்றி
மற்றவர் காணா மலையே போற்றி
சொல்லொடு பொருளின் தொடர்பே போற்றி
கல்லும் கரைக்க வல்லோய் போற்றி. 2

முந்திய பொருட்கும் முந்தியோய் போற்றி
ஐந்துகை யுடைய ஐயா போற்றி
ஐந்தொழி லாற்றும் அமரா போற்றி
அருளாய் அருள்வாய் ஆண்டவா போற்றி. 3

பொய்யா மணியே புராதனா போற்றி
அறிவின் வரம்பை அகன்றாய் போற்றி
குறிகுணங் கடந்த குன்றே போற்றி
எட்டுவான் குணத் தெந்தாய் போற்றி. 4

எண்ணும் எழுத்துமாய் இசைந்தாய் போற்றி
பண்ணும் பயனுமாய் பரந்தாய் போற்றி
அருவே உருவே அருவுரு போற்றி
பொருளே பொருளின் புணர்ப்பே போற்றி. 5

செல்வம் அருள்க தேவா போற்றி
நல்லன எமக்கருள் நாயக போற்றி
ஆக்கமும் ஊக்கமும் அருள்வாய் போற்றி
காக்க எங்களையுன் கழலிணை போற்றியே. 6

தேவருக்கு இடையூறுயாவும் தீர்த்தமெய்த் தேவா போற்றி
மூவருக்கு அரசுஅளித்த முதன்மை நற்பொருளே போற்றி
சேவடிக்கு அடிமைஆக்கிச் சிறியனேன் தன்னைக் காப்பாய்
மேவிய புகழ் படைத்த விக்கின இராசா போற்றி. 7



## 3. ஐங்கரன் துதிப் பாடல்கள்

பிரணவப் பொருளாம் பெருந்தகை ஐங்கரன்
சரணஅற் புதமலர் தலைக்கு அணிவோமே.

— **வெற்றி வேற்கை**

வாக்குண்டாம் நல்ல மனமுண்டாம் மாமலராள்
நோக்குண்டாம் மேனி நுடங்காது பூக்கொண்டு
துப்பார் திருமேனித் தும்பிக்கையான் பாதம்
தப்பாமல் சார்வார் தமக்கு.

— **மூதுரை**

பாலும் தெளிதேனும் பாகும் பருப்புமிவை
நாலும் கலந்துனக்கு நான்தருவேன் – கோலஞ்செய்
துங்கக் கரிமுகத்துத் தூமணியே நீ எனக்குச்
சங்கத் தமிழ்மூன்றும் தா.

— நல்வழி

மின்னெறி சடாமுடி விநாயகன் அடிதொழ
நன்னெறி வெண்பா நாற்பதும் வருமே.

— நன்னெறி

திருவும் கல்வியும் சீரும் தழைக்கவும்
கருணை பூக்கவும் தீமையைப் போக்கவும்
பருவமாய் நமதுள்ளம் பழுக்கவும்
பெருகும் ஆழத்துப் பிள்ளையைப் பேணுவாய்.

— விருத்தாசலப் புராணம்

இகநலம் பரநலம் இரண்டும் வாய்க்குமே
துகளெனத் தகர்ந்திடும் துயரத் தொல்வினை
புகலெனப் பணிபவர் புனிதப் புந்தியுள்
தகவுறுங் கணபதிப் பதங்கள் கசக்கவே
மறைமொழி மனத்துற மலரார் மாணடி
நிறைமதி நிலவு செந்நெறியை நல்குவாய்
முறையிது வழிபட எனுமா மூலமே
இறையெனுங் கணபதிப் பதங்கள் காக்கவே.

— அருட்கவி ஸ்ரீகாளிதாசர்

எனக்கு வேண்டும் வரங்களை
இசைப்பேன் கேளாய் கணபதி
மனதிற் சலனமில்லாமல்
மதியில் இருளே தோன்றாமல்
நினைக்கும் பொழுது நின் மவுன
நிலை வந்திட நீ செயல்வேண்டும்
கணக்குஞ் செல்வம் நூறுவயது
இவையும் தர நீ கடவாய்!

— பாரதியார்

அற்புத கீர்த்தி வேண்டின்
ஆனந்த வாழ்க்கை வேண்டின்
நற்பொருள் குவிதல் வேண்டின்
நலமெலாம் பெருக வேண்டின்
கற்பக மூர்த்தி தெய்வக்
களஞ்சியத் திருக்கை சென்று
பொற்பதம் பணிந்து பாரீர்
பொய்யிலை கண்ட உண்மை.

— கவிஞர் கண்ணதாசன்



வேழ முகத்து விநாயகனைத் தொழ
வாழ்வு மிகுந்து வரும்
வெள்ளைக் கொம்பன் விநாயகனைத் தொழ
துள்ளி ஓடும் தொடர்ந்த வினைகளே. (வேழ

அப்பம் முப்பழம் அமுது செய்தருளிய
தொப்பை அப்பனை தொழவினை அருமே
வெள்ளைக் கொம்பன் விநாயகனைத் தொழ
துள்ளி ஓடும் தொடர்ந்த வினைகளே. (வேழ



## 4. திருப்புகழ்

கைத்தல நிறைகனி யப்பமொடவல் பொரி
கப்பிய கரிமுகன் அடிபேணிக்
கற்றிடு மடியவர் புத்தியி லுறைபவர்
கற்பக மெனவினை கடிதேகும்
மத்தமும் மதியமும் வைத்திடு மரன்மகன்
மற்பொருள் திரள்புய மதயானை
மத்தள வயிறனை உத்தமி புதல்வனை
மட்டவிழ் மலர்கொடு பணிவேனே
முத்தமி ழடைவினை முற்படு கிரிதனில்
முற்பட எழுதிய முதல்வோனே

முப்புர மெரிசெய்த அச்சிவ னுறைரதம்
அச்சது பொடிசெய்த அதிதீரா
அத்துய ரதுகொடு சுப்பிர மணிபடும்
அப்புன மதனிடை யிபமாகி
அக்குற மகளுட னச்சிறு முருகனை
அக்கண மணமருள் பெருமாளே. 1

உம்பர்தருத் தேனுமணிக் கசிவாகி
ஒண்கடலிற் றேனமுதத் துணர்வூறி
இன்பரசத் தேபருகிப் பலகாலும்
என்றனுயிர்க் காதரவுற் றருள்வாயே
தம்பிதனக் காகவனத் தணைவோனே
தந்தைவலத் தாலருள்கைக் கனியோனே
அன்பர்தமக் கானநிலைப் பொருளோனே
ஐந்துகரத் தானைமுகப் பெருமாளே. 2



## ஔவையார் அருளிச் செய்த

## 5. விநாயகர் அகவல்

சீதக் களபச் செந்தாமரைப்பூம்
பாதச் சிலம்பு பல இசை பாட
பொன் அரைஞாணும் பூந்துகில் ஆடையும்
வன்ன மருங்கில் வளர்ந்தழகெறிப்ப

பேழை வயிறும் பெரும் பாரக் கோடும்
வேழ முகமும் விளங்கு சிந்தூரமும்
அஞ்சுகரமும் அங்குச பாசமும்
நெஞ்சிற் குடிகொண்ட நீலமேனியும்

நான்ற வாயும் நாலிறு புயமும்
மூன்று கண்ணும் மும்மதச் சுவடும்
இரண்டு செவியும் இலங்கு பொன் முடியும்
திரண்ட முப்புரிநூல் திகழொளி மார்பும்

சொற்பதம் கடந்த துரிய மெய்ஞ்ஞான
அற்புதம் ஈன்ற கற்பகக் களிறே
முப்பழம் நுகரும் மூஷிக வாகன
இப்பொழுது என்னை ஆட்கொள்ள வேண்டி

தாயாயெனக்குத் தானெழுந்தருளி
மாயாப்பிறவி மயக்கம் அறுத்து
திருந்திய முதல் ஐந்தெழுத்துந் தெளிவாய்
பொருந்தவே வந்து உளந்தனிற் புகுந்து

குருவடிவாகிக் குவலயந் தன்னில்
திருவடி வைத்துத் திறமிது பொருளென
வாடா வகைதான் மகிழ்ந்தெனக் கருளி
கோடாயுதத்தால் கொடுவினை களைந்தே

உவட்டா உபதேசம் புகட்டி என்செவியில்
தெவிட்டாத ஞானத் தெளிவையும் காட்டி
ஐம்புலன் தன்னை அடக்கும் உபாயம்
இன்புறு கருணையின் இனிதெனக் கருளி

கருவிகள் ஒடுக்கும் கருத்தறிவித்து
இருவினை தன்னை அறுத்திருள் கடிந்து
தலமொரு நான்கும் தந்தெனக் கருளி
மலமொரு மூன்றின் மயக்கமறுத்தே

ஒன்பது வாயில் ஒரு மந்திரத்தால்
ஐம்புலக்கதவை அடைப்பதுங் காட்டி
ஆறாதாரத்து அங்குச நிலையும்
பேரா நிறுத்தி பேச்சுரை அறுத்தே

இடை பிங்கலையின் எழுத்தறிவித்து
கடையிற் கழுமுனை கபாலமும் காட்டி
மூன்று மண்டலத்தின் முட்டிய தூணின்
நான்றெழு பாம்பின் நாவிலுணர்த்தி

குண்டலி யதனிற் கூடிய அசபை
விண்டெழு மந்திரம் வெளிப்பட உரைத்து
மூலாதாரத்து மூண்டெழு கனலைக்
காலாலெழுப்புங் கருத்தறிவித்து

அமுத நிலையும் ஆதித்தன் இயக்கமும்
குமுத சகாயன் குணத்தையுங் கூறி
இடைச்சக்கரத்தின் ஈரெட்டு நிலையும்
உடற்சக்கரத்தின் உறுப்பையுங் காட்டி

சண்முக தூலமும் சதுர்முக சூக்ஷ்மமும்
என் முகமாக இனிதெனக் கருளி
புரியட்ட காயம் புலப்பட எனக்குத்
தெரியெட்டு நிலையும் தெரிசனப்படுத்தி

கருத்தினிற் கபால வாயில் காட்டி
இருத்திமுத்தி இனிதெனக் கருளி
என்னை அறிவித்து எனக்கருள் செய்து
முன்னை வினையின் முதலைக் களைந்து

வாக்கும் மனமும் இல்லா மனோலயம்
தேக்கியே எந்தன் சிந்தை தெளிவித்து
இருள்வெளி இரண்டுக்கு என்றிடமென்ன
அருள்தரும் ஆனந்தத்து அழுத்திஎன் செவியில்

எல்லையில்லா ஆனந்தம் அளித்து
அல்லல் களைந்து அருள் வழிகாட்டி
சத்தத்தினுள்ளே சதாசிவங் காட்டி
சித்தததினுள்ளே சிவலிங்கம் காட்டி

அணுவிற்கணுவாய் அப்பாலுக்கப்பாலாய்
கணு முற்றி நின்ற கரும்புள்ளே காட்டி
வேடமும் நீறும் விளங்க நிறுத்தி
கூடுமெய்த் தொண்டர் குழாத்துடன் கூட்டி

அஞ்சக் கரத்தின் அரும்பொருள் தன்னை
நெஞ்சக் கருத்தின் நிலையறிவித்து
தத்துவ நிலையை தந்தெனையாண்ட
வித்தக விநாயக! விரை கழல் சரணே!

***ஔவையார் அருளிச் செய்த***
***விநாயகர் அகவல் முற்றிற்று***



## காசியப முனிவர் அருளிச் செய்த

# 6. விநாயகர் கவசம்

தலைமுடி, நெற்றி, புருவம், இணை விழிகள்

வளர் சிகையைப் பராபரமாய் வயங்கு
விநாயகர் காக்க வாய்ந்த சென்னி
அளவுபடா வதிகசவுந் தரதேக
மகோற்கடர்தாம் அமர்ந்து காக்க
விளரற நெற்றியை யென்றும் விளங்கிய
காசிபர் காக்க புருவம் தம்மைத்
தளர்வின் மகோ தரர் காக்க
தடவிழிகள் பாலசந் திரனார் காக்க

உதடு, நாக்கு, முகவாய்க்கட்டை,
வாக்கு, பல், காது, மூக்கு

கவின் வளரு மதரங் கசமுகர் காக்க
காலங்கணக் கிரீடர் காக்க
நவில் சிபுகம் கிரிசை சுதர் காக்க
நனி வாக்கை விநாயகர் தாம் காக்க
அவிர்நகை துன் முகர் காக்க
அள்ளழிற் செஞ்செவி பாசபாணி காக்க
தவிற்தலுறா திளங்கொடி போல் வளர்மணி
நாசியைச் சிந்தி தார்த்தர் காக்க

முகம், கழுத்து, இணையான தோள்கள்,
முலை, உள்ளம், வயிறு

காமருபூ முகந்தன்னைக் குணேசர்
நனி காக்ககளங் கணேசர் காக்க
வாமமுறு மிருதோளும் வயங்குகந்த
பூர்வசர் தாம் மகிழ்ந்து காக்க
ஏமமுறு மணிமுலை விக்கின விநாசன் காக்க
இதயந் தன்னைத் தோமகலுங் கணநாதர் காக்க
அகட்டினைத் துலங்கு ஏரம்பர் காக்க

### பக்கங்கள், குறி, குய்யம், தொடைகள்

பக்கமிரண் டையும் தராதரர் காக்க
பிருட்டத்தைப் பாவம் நீக்கும்
விக்கினகரன் காக்க விளங்கிலிங்கம்
வியாளபூ டணர்தாம் காக்க
தக்ககுய்யந் தன்னைவக் கிரதுண்டர் காக்க
சகனத்தை யல்லல் உக்கண பன்காக்க
ஊருவை மங்களமூர்த்தி உவந்து காக்க

### முழங்கால்கள், இருகால்கள், இருகைகள், முன்கைகள்

தாள்முழந்தாள் மகாபுத்தி காக்க
இருபதம் ஏக தந்தர் காக்க
வாழ்கரம் க்ஷிப்பிரப் பிரசாதனார் காக்க
முன்கையை வணங்கு வார்நோய்
ஆழ்தரச் செய் யாசாபூரகர் காக்க
விரல் பதும அத்தர் காக்க
கேழ்கிளரும் நகங்கள் விநாயகர் காக்க
கிழக்கினிற் புத் தீசர் காக்க

### திக்குகள் அனைத்திலிருந்தும்

அக்கினியில் சித்தீசர் காக்க
உமாபுத்திரர் தென்திசை காக்க
மிக்கநிரு தியிற்கணேசுரர் காக்க
விக்கின வர்த்தனர் மேற்கென்னுந்
திக்க தனிற் காக்க
வாயுவிற் கசகர் ணன்காக்க
திகழ் உதீசி தக்கநிதி பன்காக்க
வடகிழக்கில் ஈசநந் தனரே காக்க

### பகல், இரவு முதலிய காலங்களிலும் பிற தொல்லைகளிலிருந்தும்

ஏகதந்தர் பகல் முழுதும் காக்க
இரவினும் சந்தி இரண்டன் மாட்டும்

சையின் விக்கின கிருது காக்க
இராக் கதர்பூதம் உருவேதாளம்
மோகினி பேய் இவையாதி உயிர்
திறத்தால் வருந்துயரம் முடிவிலாத
வேகமுறு பிணிபலவும் விலக்குபு
பாசாங்குசர் தாம் விரைந்து காக்க

*மானம், புகழ் முதலியவற்றையும்,*
*உற்றார்–உறவினரையும்*

மதிஞானம் தவந்தான மானமொளி
புகழ்குலம் வண்சரீரம் முற்றும்
பதிவான தனம் தானியம் கிரகம்
மனைவி மைந்தர் பயில்நட் பாதிக்
கதியாவும் கலந்து சர்வா யுதர்காக்க
காமர்பவுத் திரர் முன்னான
விதியாரும் சுற்றமெல்லாம் மயூரேசர்
எஞ்ஞான்றும் விரும்பிக் காக்க

*படிப்போர் நோயற்றவராய் வாழ்வார்*

வென்றி சீவிதம் கபிலர் காக்க
கரி யாதியெல்லாம் விகடர் காக்க
என்றிவ்வா றிதுதனை முக்காலமும்
ஓதிடுனும் பால் இடையூறொன்றும்
ஒன்றுறா முனிவரவர்காள் அறிமின்கள்
யாரொருவர் ஓதினாலும்
மன்ற ஆங்கவர் தேகம் பிணியற
வச்சிர தேகமாகி மின்னும்

*காசியப முனிவர் அருளிச் செய்த*
*விநாயகர் கவசம் முற்றிற்று*



காசியப முனிவர் அருளிச் செய்த

## 7. காரிய சித்தி மாலை

பந்தம் அகற்றும் அனந்த குணம்
பரப்பும் எவன்பால் உதிக்குமோ?
எந்த உலகும் எவனிடத்தில்
ஈண்டி ருந்து கரக்குமோ?
சந்த மறை ஆகமக் கலைகள்
அனைத்தும் எவன்பால் தகவருமோ?
அந்த இறையாம் கணபதியை
அன்புகூரத் தொழுகின்றோம். 1

உலகம் முழுதும் நீக்கமற
ஒன்றாய் நிற்கும் பொருளெவன்? அவ்
வுலகிற் பிறக்கும் விகாரங்கள்
உறாத மேலாம் ஒளியாவன்?
உலகம் புரியும் வினைப்பயனை
ஊட்டும் களைகண் எவன்? அந்த
உலக முதலைக் கணபதியை
உவந்து சரணம் அடைகின்றோம். 2

இடர்கள் முழுதும் எவன்அருளால்
எரிவீ ழும்பஞ்சு எனமாயும்
தொடரும் உயிர்கள் எவன்அருளால்
சுரர்வாழ் பதியும் உறச்செய்யும்?
கடவுள் முதலோர்க்கு ஊறுஇன்றிக்
கருமம் எவனால் முடிவுறும்? அத்
தடவு மருப்புக் கணபதி பொன்
பாதம் சரணம் அடைகின்றோம். 3

மூர்த்தி யாகித் தலமாகி
முந்நீர் கங்கை முதலான
தீர்த்த மாகி அறிந்து அறியாத்
திறத்தி னாலும் உயிர்க்கு நலம்

ஆர்த்தி நாளும் அறியாமை
அகற்றி அறிவிப் பான்எவன்? அப்
போர்த்த கருணைக் கணபதியைப்
புகழ்ந்து சரணம் அடைகின்றோம். 4

செய்யும் வினையின் முதல்யாவன்?
செய்யப் படும்அப் பொருள்யாவன்?
ஐயமின்றி உளதாகும்
அந்தக் கருமப் பயன்யாவன்?
உய்யும் வினையின் பயன்விளைவில்
ஊட்டி விடுப்பான் எவன்? அந்தப்
பொய்யில் இறையைக் கணபதியைப்
புரிந்து சரணம் அடைகின்றோம். 5

வேதம் அளந்தும் அறிவரிய
விகிர்தன் யாவன் விழுத்தகைய
வேத முடிவில் நடம் நவிலும்
விமலன் யாவன்? விளங்குபர
நாத முடிவில் வீற்றிருக்கும்
நாதன் எவன்? எண்குணன் எவன்? அப்
போர்த்த முதலைக் கணபதியைப்
புகழ்ந்து சரணம் அடைகின்றோம். 6

மண்ணின் ஓர்ஐங் குணமாகி
வதிவானெவன்? நீர் இடைநான்காய்
நண்ணி அமர்வான் எவன்? தீயின்
மூன்றாய் நவில்வா னெவன்? வளியின்
எண்ணும் இரண்டு குணமாகி
இயைவான் எவன்? வான் இடையொன்றாம்
அண்ணல் எவன்? அக்கணபதியை
அன்பிற் சரணம் அடைகின்றோம். 7

பாச அறிவில் பசு அறிவில்
பற்றற்கு அரிய பரன்யாவன்?
பாச அறிவும் பசு அறிவும்
பயிலப் பணிக்கும் அவன் யாவன்?

பாச அறிவும் பசு அறிவும்
பாற்றி மேலாம் அறிவான
தேகன் எவன்? அக்கணபதியைத்
திகழச் சரணம் அடைகின்றோம். 8

*காசியப முனிவர் அருளிச் செய்த*
*காரிய சித்தி மாலை முற்றிற்று*



## 8. விநாயகர் ஸப்தகம்

குருவே பரமன் கொழுந்தே பணிந்தேன்
குவலயம் போற்றும் கணநாதா!
வருவாய் நினைவில் வந்தெனை ஆள்வாய்
வடிவேலவனின் சோதரனே!
அருள்வாய்! உனையே அனுதினம் பணிவேன்
அன்னை பராசக்தி அருள்மகனே!
திருமால் மருகா! திருவடி சரணம்!
தீன ரக்ஷகனே கணநாதா! 1

ஆணையின் அன்பன் அழகு முருகனின்
அண்ணனாய் உலகில் அவதரித்தாய்
ஆனைமுகத்தொடு ஐங்கரங் கொண்டதோர்
அற்புத வடிவே! கணநாதா!
யானென தென்னும் எண்ணங்கள் நீக்கி
இகபரசுகமதை எனக்களிப்பாய்!
யானுனை என்றும் இராப்பகல் தொழுதேன்!
என் துயர் களைவாய்! கணநாதா! 2

குஞ்சரனே! எழிற் குஞ்சரிநாதனாம்
குகசரவணபவ சோதரனே!
வெஞ்சமரெதிலும் வெற்றியே தருவாய்!
வேழமுகத்தோய் கணநாதா!
அஞ்சிடும் அன்பருக் கபயம் அளிப்பாய்!
அரவணைத் தெனையும் ஆண்டருள்வாய்
பஞ்சமி! பைரவி! பர்வத புத்தரி!
பார்வதி மைந்தா! கணநாதா! 3

வல்லபை நாதா! விக்ன விநாயகா
வாழ்த்திப் பணிந்தேன் உன்பதமே!
வல்வினை எல்லாம் வலிமை இழந்தே
வாடிச் செய்வாய்! கணநாதா!
தொல்வினை யாலிவன் துயருறும் அடியேன்
துன்பமெலாம் நீ துடைத்திடுவாய்!
அல்லொடு பகலும் அனவரதமும் உன்
அடியினை தொழுவேன் கணநாதா! 4

வானொடு நீரும் வளியும் தீயும்
வையகம் யாவும் உன் வடிவே!
மானிட வாழ்வை மகிழ்வுறச் செய்வாய்
மங்கலப் பொருளே கணநாதா!
தேனோடு பாலும் தெங்கொடு பழமும்
தெவிட்டா அமுதம் தினம் படைப்பேன்
ஊனொடு உயிரும் உணர்வும் புரப்பாய்!
உன்னடி தொழுதேன் கணநாதா! 5

ஓமெனும் வடிவே உன் வடிவாமென
உலகிற்கெலாம் நீ உணர்த்திடுவாய்!
ஆம் எனச் சொல்வாய்! அன்னை குமாரா
ஆதரித்தருள்வாய்! கணநாதா!
ஓமெனும் ஒலியில் உன்குரல் கேட்டே
உளமகிந்துன் புகழ் பாடிடுவேன்
ஓமெனும் பொருளே உமயவன் பாலா!
ஒரு பரம் பொருளே! கணநாதா! 6

சங்கரன் மகனே! சஞ்சலம் தீர்ப்பாய்
சக்தி குமாரா! கணநாதா!
ஐங்கரனே! உன் அடியினை தொழுதேன்
அடைக்கலம் நீயே கணநாதா!
சங்கரித் திருவாய் சங்கடமெல்லாம்
சம்புகுமாரா! கணநாதா!
சங்கரி மைந்தா! சந்ததம் பணிவேன்
சரணம்! சரணம்! கணநாதா! 7

# 9. வள்ளலார் அருளிய பாடல்கள்

## அ) கணேசத் தனித் திருமாலை

திங்கள்அம் கொழுந்து வேய்ந்த
செஞ்சடைக் கொழுந்தே போற்றி
மங்கைவல் லபைக்கு வாய்த்த
மகிழ்நநின் மலர்த்தாள் போற்றி
ஐங்கர நால்வாய் முக்கண்
அருட்சிவ களிறே போற்றி
கங்கைஜ மகிழும் செல்வக்
கணேசநின் கழல்கள் போற்றி



## ஆ) கணேசத் திருவருள் மாலை

சீத நாள்மலர்ச் செல்வனும் மாமலர்ச்
செல்வி மார்பகச் செல்வனும் காண்கிலாப்
பாதம் நாடொறும் பற்றறப் பற்றுவோர்
பாதம் நாடப் பரிந்தருள் பாலிப்பாய்
நாதம் நாடிய அந்தத்தில் ஓங்கும்மெய்ஞ்
ஞான நாடக நாயக நான்கெனும்
வேதம் நாடிய மெய்ப்பொரு ளேஅருள்
விளங்கும் சித்தி விநாயக வள்ளலே. 1

என்னை வேண்டி எனக்கருள் செய்தியேல்
இன்னல் நீங்கும்நல் இன்பமும் ஓங்கும்நின்
தன்னை வேண்டிச்ச ரண்புகுந் தேன்என்னைத்
தாங்கிக் கொள்ளும் சரண்பிறி தில்லைகாண்
அன்னை வேண்டிஅ ழும்மகப் போல்கின்றேன்
அறிகி லேன்நின் திருவுளம் ஐயனே
மின்னை வேண்டிய செஞ்சடை யாளனே
விளங்கும் சித்தி விநாயக வள்ளலே. 2

வாளி லேவிழி மங்கையர் கொங்கையாம்
மாலையி லேமுக மாயத்தி லேஅவர்
தோளி லேஇடைச் சூழலி லேஉந்திச்
சுழியி லேநிதம் சுற்றும்என் நெஞ்சம்நின்

தாளி லேநின்த னித்த புகழிலே
தங்கும் வண்ணம் தரஉளம் செய்தியோ
வேளி லேஅழ கானசெவ் வேளின்முன்
விளங்கும் சித்தி விநாயக வள்ளலே. 3

நாவி னால்உனை நாள்தொறும் பாடுவார்
நாடு வார்தமை நண்ணிப் புகழவும்
ஓவி லாதுனைப் பாடவும் துன்பெலாம்
ஓட வும்மகிழ் ஓங்கவும் செய்குவாய்
காவி நேர்களத் தான்மகிழ் ஐங்கரக்
கடவு ளேநற் கருங்குழி என்னும்ஊர்
மேவி அன்பர்க் கருள்கண நாதனே
விளங்கும் சித்தி விநாயக வள்ளலே. 4



## இ) சித்தி விநாயகர் பதிகம்

உலகெலாம் தழைப்ப அருள்மத அருவி
ஒழுகுமா முகமும்ஐங் கரமும்
இலகுசெம் மேனிக் காட்சியும் இரண்டோ
டிரண்டென ஓங்குதிண் தோளும்
திலகவாள் நுதலார் சித்திபுத் திகளைச்
சேர்த்தணைத் திடும்இரு மருங்கும்
விலகுறா தெளியேன் விழைந்தனன் சித்தி
விநாயக விக்கினேச் சுரனே. 1

உள்ளமும் உயிரும் உணர்ச்சியும் உடம்பும்
உறுபொருள் யாவும்நின் தனக்கே
கள்ளமும் கரிசும் நினைந்திடா துதவிக்
கழல்இணை நினைந்துநின் கருணை
வெள்ளம்உண் டிரவு பகல்அறி யாத
வீட்டினில் இருந்துநின் னோடும்
விள்ளல்இல் லாமல் கலப்பனோ சித்தி
விநாயக விக்கினேச் சுரனே. 2

நாதமும் கடந்து நிறைந்துநின் மயமே
நான்என அறிந்துநான் தானாம்
பேதமும் கடந்த மௌனராச் சியத்தைப்
பேதையேன் பிடிப்பதெந் நாளோ
ஏதமும் சமய வாதமும் விடுத்தோர்
இதயமும் ஏழையேன் சிரமும்
வேதமும் தாங்கும் பாதனே சித்தி
விநாயக விக்கினேச் சுரனே. 3

கானல்நீர் விழைந்த மான்என உலகக்
கட்டினை நட்டுழன் றலையும்
ஈனவஞ் சகநெஞ் சகப்புலை யேனை
ஏற்றுகொண் டருளும்நான் உளதோ
ஊனம்ஒன் றில்லா உத்தமர் உளத்தே
ஓங்குசீர்ப் பிரணவ ஒளியே
வேல்நவில் கரத்தோர்க் கினியவா சித்தி
விநாயக விக்கினேச் சுரனே. 4



# சுப்ரமண்ய ஸ்தோத்திரங்கள்

## 1. முருகபெருமான் துதிப் பாடல்கள்

எழும் போதும் வேலும் மயிலும்
என்பேன்; எழுந்தே மகிழ்ந்து
தொழும் போதும் வேலும் மயிலும்
என்பேன்; தொழுதே உருகி
அழும் போதும் வேலும் மயிலும்
என்பேன்; அடியேன் உடலும்
விழும் போதும் வேலும் மயிலும்
என்பேன்; செந்தில் வேலவனே! 1

ஆறிரு தடந்தோள் வாழ்க அறுமுகம் வாழ்க வெற்பைக்
கூறுசெய் தனிவேல் வாழ்க குக்குடம் வாழ்க செவ்வேள்
ஏறிய மஞ்ஞை வாழ்க யானைதன் அணங்கு வாழ்க
மாறிலா வள்ளி வாழ்க வாழ்க சீரடியா ரெல்லாம். 2

நாள் என்செயும்; வினைதான் என்செயும்; எனைநாடிவந்த
கோள் என்செயும்; கொடுங்கூற்று என்செயும்; குமரேசர்இரு
தாளும் சிலம்பும் சதங்கையும் தண்டையும் ஷண்முகமும்
தோளும் கடம்பும் எனக்கு முன்னே வந்து தோன்றிடினே. 3

விழிக்குத் துணை திருமென்மலர்ப் பாதங்கள் மெய்ம்மைகுன்றா
மொழிக்குத் துணை முருகாவெனும் நாமங்கள் முன்புசெய்த
பழிக்குத் துணை அவன்பன்னிரு தோளும் பயந்ததனி
வழிக்குத் துணை வடிவேலும் செங்கோடன் மயூரமுமே. 4

அருவமும் உருவம்ஆகி அனாதியாய்ப் பலவாய் ஒன்றாய்
பிரம்மமாய் நின்ற ஜோதிப் பிழம்பதோர் மேனி ஆகக்
கருணைகூர் முகங்கள் ஆறும் கரங்கள் பன்னிரண்டும் கொண்டே
ஒரு திருமுருகன் வந்தாங்கு உதித்தனன் உலகம் உய்ய. 5

தீயவை புரிந்தாரேனும் குமரவேள் திருமுன் உற்றால்
தூயவராகி மேலைத் தொல்கதி அடைவர்
ஆயவும் வேண்டும் கொல்லோ அடுசமர் அந்நாள் செய்த
மாயையின் மகனுமன்றோ வரம்பிலா அருள் பெற்றுய்ந்தான். 6

நோயுற்று அடராமல் நொந்துமனம் வாடாமல்
பாயில் கிடவாமல் பாவியேனது காயத்தை
ஓர்நொடிக்குள் நீக்கி ஒண்போரூரய்யாநின்
சீரடிக்கீழ் வைப்பாய் தெரிந்து. 7

மூவிரு முகங்கள் போற்றி! முகம்பொழிகருணை போற்றி!
ஏவரும் துதிக்க நின்ற ஈராறுதோள் போற்றி! காஞ்சி
மாவடி வைகும் செவ்வேள் மலரடி போற்றி! அன்னான்
சேவலும் மயிலும் போற்றி! திருக்கைவேல் போற்றி போற்றி! 8

உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்க்
கருவாய் உயிராய்க் கதியாய் விதியாய்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே! 9



*நக்கீரர் அருளிய*

## 2. திருமுருகாற்றுப்படை வெண்பாக்கள்

குன்றம் எறிந்தாய் குரைகடலில் சூர்தடிந்தாய்
புன்தலைய பூதப் பொருபடையாய் – என்றும்
இளையாய் அழகியாய் ஏறூர்ந்தான் ஏறே
உளையாய் என்உள்ளத்து உறை. 1

குன்றம் எறிந்ததுவும் குன்றப்போர் செய்ததுவும்
அன்றங்கு அமரரிடர் தீர்த்ததுவும் – இன்றுஎன்னைக்
கைவிடா நின்றதுவும் கல்பொதும்பில் காத்ததுவும்
மெய்விடா வீரன்கை வேல். 2

வீரவேல் தாரைவேல் விண்ணோர் சிறைமீட்ட
தீரவேல் செவ்வேள் திருக்கைவேல் – வாரி
குளித்தவேல் கொற்றவேல் சூர்மார்பும் குன்றும்
துளைத்தவேல் உண்டே துணை. 3

இன்னம்ஒரு கால்எனது இடும்பைக் குன்றுக்கும்
கொன்னவில் வேல்சூர்தடிந்த கொற்றவா – முன்னம்
பனிவேய் நெடுங்குன்றம் பட்டுஉருவத் தொட்ட
தனிவேலை வாங்கத் தகும். 4

உன்னை ஒழிய ஒருவரையும் நம்புகிலேன்
பின்னை ஒருவரையான் பின்செல்லேன் – பன்னிருகை
கோலப்பா வானோர் கொடியவினை தீர்த்தருளும்
வேலப்பா செந்தில் வாழ்வே. 5

அஞ்சுமுகம் தோன்றில் ஆறுமுகம் தோன்றும்
வெஞ்சமரில் அஞ்சலென வேல்தோன்றும் – நெஞ்சில்
ஒருகால் நினைக்கில் இருகாலும் தோன்றும்
முருகா என்று ஓதுவார்முன். 6

முருகனே! செந்தில் முதல்வனே! மாயோன்
மருகனே! ஈசன் மகனே! – ஒருகைமுகன்
தம்பியே! நின்னுடைய தண்டைக்கால் எப்பொழுதும்
நம்பியே கைதொழுவேன் நான். 7

காக்கக் கடவிய நீ காவாது இருந்தக்கால்
ஆர்க்குப் பரமாம் அறுமுகவா – பூக்குங்
கடம்பா! முருகா! கதிர்வேலா! நல்ல
இடங்காண் இரங்காய் இனி. 8

பரங்குன்றில் பன்னிருகைக் கோமான்தன் பாதம்
கரங்கூப்பிக் கண்குளிரக் கண்டு – சுருங்காமல்
ஆசையால் நெஞ்சே அணிமுருகாற் றுப்படையைப்
பூசையாக் கொண்டே புகல். 9

நக்கீரர் தாம்உரைத்த நன்முருகாற்றுப் படையைத்
தற்கோல நாள்தோறும் சாற்றினால் – முற்கோல
மாமுருகன் வந்து மனக்கவலை தீர்த்தருளித்
தான்நினைத்த எல்லாம் தரும். 10



## 3. சுப்ரமண்ய புஜங்கம்

### இடர் தீர

என்றும் இளமை எழிலன் எனினும்
இடர்மா மலைக்கே இடராவான்
துன்றும் கரிமா முகத்தோன் எனினும்
சிம்ம முகச்சிவன் மகிழ்நேயன்

நன்றே நாடி இந்திரன் பிரமன்
நாடித் தேடும் கணேசனெனும்
ஒன்றே எனக்கு சுபம் திருவும்
உதவும் மங்கள மூர்த்தமதே. 1

### புலமை உண்டாக

சொல்லு மறியேன் சுதி அறியேன்
சொற்கள் சுமக்கும் பொருளறியேன்
சொல்லைச் சொல்லும்விதி யறியேன்
தோய்ந்து சொல்ல நானறியேன்
எல்லை யிலாதோர் ஞான வொளி
இதயத் தமர்ந்து அறுமுகமாய்
சொல்லை வெள்ள மெனப் பெருக்கும்
தோற்றம் கண்டேன் சுடர்கண்டேண். 2

### திருவடி தரிசனம் கிட்ட

மயில்மீது ஆர்த்து உயர்வாக்கிற் பொதிந்து
மனதைக் கவரும் உடலான்
பயில்வோர்கள் உள்ளக்குகைக் கோயில் தங்கி
பார்ப்பவர் தெய்வ மானான்
உயிராகும் மறையின் பொருளாகி நின்று
உலகைப் புரக்கும் பெருமான்
கயிலாய மேவும் அரனாரின் செல்வக்
கந்தன் பதம் பணிகுவாம். 3

### பிறவிப் பிணி நீங்க

என்றன் சந்நிதி யடையும் மனிதர்
எப்போ தெனினு மப்போதே
இந்தப் பிறவியின் சாகரக் கரையை
எய்திக் களித்தோ ராகின்றார்
மாந்தரு மறிய மறையை விளக்கிச்
செந்தில் சாகரக் கரையதனில்
சுந்தரன் சக்தி பாலன் அமர்ந்தான்
தூயன் பாதம் துதிக்கின்றேன். 4

### துன்பம் விலக

கடலில் தோன்றும் அலையும் அழிந்து
காட்சி மறைவது போல்
திடமாய்ச் சந்நிதி சேவித் திடுவார்
தீமை யழிந்து படும்
படமாய் மனதில் பதியச் செய்ய
பரவைக் கரையில் குகன்
இடமே யமர்ந்தான் இதயமலர் மேல்
ஏற்றித் தியானம் செய்கின்றேன். 5

### கயிலை தரிசனம் கிட்ட

என்றன் இருக்கை யறிந்தே யெவரும்
இம்மலை ஏறி வரின்
எந்தைக் கயிலை மலை மீதேறும்
இனிய பலன் கொள்வார்
கந்தன் இதனைச் சுட்டிக் காட்டிக்
கந்த மான கிரிமேல்
சிந்தை மகிழ மூவிரு முகமாய்த்
திருக்கொலு வமர்ந்தே யிருக்கட்டும். 6

### பாவம் கரைய

கொடிதாம் பாவக் குறை நீக்கிடவே
பெரிதாம் கடற் கரையில்
அடியார் தவமே நிறைவே தருமோர்
கந்த மான கிரிமேல்
குடியாம் குகையில் ஒளியின் வடிவாய்
குலவி விளங்கு குகன்
அடியார் மிடிமை கெடவே செய்வான்
அவனைச் சரண மடைகின்றேன். 7

### மனம் அமைதியுற

மன்னும் இளமை யாயிரம் ஆதவர்
மலரும் காந்தி யுடன்
நன்மலர்க் கொத்துச் சூழ்ந்து மறைக்கும்
இரத்தின மஞ்ச மதில்

கன்னிய ரறுவர் போற்றி வளர்த்த
கந்தன் கொலு காணப்
பொன்மயக் குகையில் புகுந்த மாந்தர்
சித்தம் சாந்தி யுறும். 8

### புகலிடம் கிட்ட

மென்மை மிகுந்த கமலத் திருவடி
மேலும் அசையச் சிவப்பாகும்
மன்னும் அழகு மனதைக் கவர்ந்து
மலரின் மேலே குடியேற்றும்
சின்னம் சிறிய வண்டாம் மனது
சிக்கல் பலவும் விட்டேகி
பொன்னாம் பாதத் தாமரைச் சார்ந்து
பொலிவு பெற்றே வாழட்டும். 9

### அக இருள் நீங்க

பொன்னெனத் திகழும் பூந்துலகி லாடை
பொலிவுடன் இடையில் ஒளி துள்ள
மின்னென மணிகள் மெல்லிசை ஒலிக்க
மேகலை இடையைப் பொன்னாத்த
தன்னிகரில்லா இடையதன் காந்தித்
தன்னொளி ஒன்றை ஏவிவிடும்
நின்னெழில் இடையின் அணியா அழகை
நெஞ்சில் தியானம் செய்கின்றேன். 10

### ஆபத்து விலக

வேடவேந்தன் திருமகள் வள்ளி
விரிந்த நகில்கள் மீதயர்ந்த
சேடல் குங்குமச் சேற்றில் தோய்ந்து
திகழும் நின்றன் தடமார்பு
நாடும் அடியார் துன்பம் துடைத்து
நலமே பொங்கச் சிவந்து விடும்
கொடிய தாரகன் தன்னைக் கடிந்த
குமரன் மார்பைப் போற்றுகிறேன். 11

### பிரம்ம ஞானம் கிட்ட

வேதன் தலையில் குட்டிய கை
விண்ணவர் கோனை வாழ்த்தும் கை
வாதனை போக்கும் யமதண்டமதாய்
வையம் தாங்கும் விளையாட்டாய்
சாதனைக் கரியின் கை பற்றி
தன்மத மடக்கும் நின்னுடைய
காதல் கரங்கள் பன்னி ரெண்டும்
கந்தா என்னைக் காத்திடுக. 12

### தாபங்கள் நீங்க

சந்திரர் அறுவர் வான் வெளியில்
சற்றும் களங்க மில்லாமல்
சுந்தரச் சுடர்தான் வீசி யெங்கும்
தோற்றக் குறைவு யேதின்றி
யந்திர மென்னச் சுழன் றாங்கு
என்றும் உதயத் தோற்றமொடு
கந்தா அவைதான் விளங்கினும், நின்
கருணை முகத்திற் கெதிராமோ. 13

### அமுத லாபம் ஏற்பட

அன்னம் அசைதல் போல் நின் புன்னகை
அழகின் அதரம் அமுதூர
சின்னஞ்சிறிய கொவ்வைப் பழமாய்ச்
சிவந்த உதடும் அழகூர
பன்னிரு கண்கள் வண்டாய் ஊர்ந்து
பவனி கடைசி ஒளியாக
நன்திரு முகங்கள் ஆறும் தாமரை
நிகர்த்தே நிற்கக் காண்கிறேன். 14

### கிருபா கடாக்ஷம் கிட்ட

விண்ணிலும் விரிந்த கருணை யதால்
வியத்தரு தயவை அருளுகின்ற
பன்னிரு விழிகள் செவி வரைக்கும்
படர்ந்து இடையீ டேதின்றி

மின்னென அருளைப் பெய் வனவாய்
விளங்கு குகனே மனதிறங்கி
என்மீது கடைக் கண் வைத்தால்
ஏது குறைதான் உனக்கெய்தும்? 15

### இஷ்டசித்தி பெற

மறைகள் ஆறு முறை யோதி
வாழ்க மகனே என மகிழும்
இறைவன் உடலில் இருந்தே பின்
எழுந்த கந்தா, முத்தாடும்
துறையாய் விளங்கும் நின் சிரங்கள்
திகழும் மகுடத் தோ டுவகை
நிறைவாய்க் காக்கும், சிரங்களையே
நெஞ்சில் தியானம் செய்கின்றேன். 16

### சத்ரு பயம் விலக

இரத்தினத் தோள் வளை ஒளிகதுவ
நல்முத்து மாலை யசைந்தாட
வரத்தில் உயர்ந்த நின் குண்டலங்கள்
வளைந்த கன்னத்தே முத்தாட
திரிபுரத்தை எரித்த சிவக்குமரா!
செந்தில் தலைவா! வேல்தாங்கி
மரகதப் பட்டை இடையுடுத்தி
வருக என்றன் கண்முன்னே. 17

### ஆனந்தம் ஏற்பட

வருக குமரா! அரு கெனவே
மகிழ்ந்தே இறைவன் கர மேந்த
பெருகும் சக்தி மடி யிருந்தே
பெம்மான் சிவனின் கரம் தாவும்
முருகே! பரமன் மகிழ்ந் தணைக்கும்
முத்தே! இளமை வடிவுடைய
ஒரு சேவகனே! கந்தா! நின்
உபய மலர்த்தாள் தொழுகின்றேன். 18

### கர்மவினை நீங்க

குமரா! பரமன் மகிழ் பாலா!
குகனே! கந்தா! சேனாபதியே!
சமரில் சக்தி வேல் கரத்தில்
தாங்கி மயில் மீதூர்பவனே!
குமரி வள்ளிக் காதல! எம்
குறைகள் தீர்க்கும் வேலவனே,
அமரில் தாரகன் தனை யழித்தாய்!
அடியன் என்னைக் காத்திடுக! 19

### திவ்ய தரிசனம் கிடைக்க

தயவே காட்டும் தன்மை யனே!
தங்கக் குகையில் வாழ்பவனே!
மயங்கி ஐந்து புலன் ஒடுங்கி
வாயில் கபமே கக்கிடவும்
பயந்து நடுங்கிப் பயண மெனப்
பாரை விட்டுப் புறப்படவே
அயர்ந்து கிடக்கும் போதென் முன்
ஆறுமுக! நீ தோன்றுகவே. 20

### யமபயம் நீங்க

காலப் படர்கள் சினம்கொண்டு
கட்டு வெட்டு குத்தென்று
ஓலமிட்டே அதட்டி என் முன்
உயிரைக் கவர வரும் போது
கோல மயில் மேல் புறப்பட்டு
குமரா சக்தி வே லோடு
பாலன் என்முன் நீ வந்து
பயமேன் எனத் தோன்றுகவே. 21

### அபயம் கிடைக்க

கருணை மிகுமோர் பெருங் கடலே
கந்தா நின்னைத் தொழுகின்றேன்
அருமைமிகு நின் பொன்னொளி சேர்
அடியில் நானும் விழுகின்றேன்

எருமைக் காலன் வரும் போதென்
எந்தப் புலனும் பேசாது
அருகே வந்து காத்திட நீ
அசட்டை செய்ய லாகாது. 22

### கவலை தீர

அண்ட மனைத்தும் வென் றங்கே
ஆண்டசூர பது மனையும்
மண்ணுள் மண்ணாய்த் தாரகனை
மாயன் சிம்ம முகத்தனையும்
தண்டித் தவனும் நீ யன்றோ?
தமியன் மனதில் புகுந்திங்கே
ஒண்டிக் கிடக்கும் கவலையெனும்
ஒருவனைக் கொல்லுத லாகாதோ? 23

### மனநோய் போக்க

துன்பச் சுமையால் தவிக்கிறேன்
சொல்ல முடியா தழுகின்றேன்
அன்பைச் சொரியும் தீனருக் கிங்
கருளும் கருணைப் பெருவாழ்வே
உன்னை நாடித் தொழுவதலால்
ஊமை, நானோர் மாற்றறியேன்
நின்னைத் தொழவுடு தடை செய்யும்
நெஞ்சின் நோவைப் போக்கிடுவாய். 24

கொடிய பிணி கள் அபஸ் மாரம்
குஷ்டம் க்ஷயமும் மூலமொடு
விடியா மேகம் சுரம் பைத்யம்
வியாதி குன்மமென நோய்கள்
கொடிய பிசாசைப் போன்ற வைகள்
குமரா உன்றன் திருநீறு
மடித்த இலையைப் பார்த்த வுடன்
மாயம் போலப் பறந்திடுமே! 25

### சரணாகதி பலன் கிட்ட

கண்கள் முருகன் தனைக் காணக்
காதுகள் புகழைக் கேட்கட்டும்
பண்ணை வாயிங் கார்க் கட்டும்
பாதத்தை கரமும் பற்றட்டும்
எண்சாண் உடலும் குற்றேவல்
எல்லாம் செய்து வாழட்டும்
கண்ணாம் முருகைப் புலன்க ளெலாம்
கலந்து மகிழ்ந்து குலவட்டும். 26

### வரம் தரும் வள்ளல்

முனிவர் பக்தர் மனிதர்கட்கே
முன்னே வந்து வரமளிக்கும்
தனித் தனி தேவர் பற் பலர்கள்
தாரணி யெங்கும் இருக்கின்றார்
மனிதரில் ஈன மனி தருக்கும்
மனம்போல் வரமே நல்கிடவே
கனிவுடைக் கடவுள் கந்த னன்றி
கருணை வடிவைக் காணகிலனே. 27

### குடும்பம் மகிழ்வுற

மக்கள் மனைவி சுற்றம் பசு
மற்ற உறவினர் அனை வோரும்
இக்கணத் தென்னுடன் வசித்திடு வோர்
யாவரும் ஒன்றே லட்சியமாய்
சிக்கெனப் பற்றி நின் திருவடியைச்
சேவிக்கும் தன்மை தருவாய் நீ
குக்குடக் கொடியோய் செந்தில் வாழ்
குமரா எமக்குக் கதிநீயே. 28

### விஷம், நோய் நீங்க

கொடிய மிருகம் கடும் பறவை
கொட்டும் பூச்சி போலென்றன்
கடிய உடலில் தோன்றி வுடன்
கட்டி வருத்தும் நோயினையே

நெடிய உன்றன் வேல் கொண்டு
நேராய்ப் பிளந்து தூளாக்கும்
முடியாம் க்ரௌஞ்ச கிரி பிளந்த
முருகா வருக! முன் வருக!! 29

### குற்றம் குறை தீர

பெற்ற குழந்தை பிழை பொறுக்கும்
பெற்றோர் உலகில் உண்டன்றோ
உற்ற தேவர் தம் தலைவா!
ஒப்பில் சக்தி யுடையானே
நற்ற வத்தின் தந்தாய் நீ
நாயேன் நாளும் செய் கின்ற
குற்றம் யாவும் பொறுத் தென்னைக்
குறை யில்லாமல் காத்தருள்க. 30

### ஆனந்தப் பெருமிதம்

இனிமை காட்டும் மயிலுக்கும்
இறைவன் ஊர்ந்த ஆட்டிற்கும்
தனிமெய் ஒளிகொள் வேலுக்கும்
தாங்கும் சேவற் கொடியுடனே
இனிதாம் கடலின் கரையினிலே
இலங்கும் செந்தில் நகருக்கும்
கனியும் நின்றன் அடிகட்கும்
கந்தா வணக்கம் வணக்கமதே. 31

### வெற்றி கூறுவோம்

ஆனந்த மூர்த்திக்கு வெற்றி கூறுவோம்
அளவற்ற சோதிக்கு வெற்றி கூறுவோம்
வான்புகழ் மூர்த்திக்கு வெற்றி கூறுவோம்
வையக நாயகர்க்கு வெற்றி கூறுவோம்
தீனரின் காவலர்க்கு வெற்றி கூறுவோம்
திகழ்முத்தி தருபவர்க்கு வெற்றி கூறுவோம்
மோனசிவன் புதல் வர்க்கு வெற்றி கூறுவோம்
முருகனுக்கு என்றென்றும் வெற்றி கூறுவோம். 32

### வாழ்த்து

எந்த மனிதன் பக்தி யுடன்
எழிலார் புஜங்க விருத்த மதை
சிந்தை கனிந்து படித் திடிலோ
செல்வம் கீர்த்தி ஆயுளுடன்
சுந்தர மனைவி புத்திரர்கள்
சூழ ஆண்டு பல வாழ்ந்து
கந்தன் பதத்தை அடைந் திடுவோர்
காசினி மீதில் நிச்சயமே. 33



அருணகிரிநாதர் அருளிய

## 4. திருப்புகழ்

முத்தைத்தரு பத்தித் திருநகை
அத்திக்கிறை சத்திச் சரவண
முத்திக்கொரு வித்துக் குருபர எனவோதும்
முக்கட்பர மற்குச் சுருதியின்
முற்பட்டது கற்பித் திருவரு
முப்பத்துமு வர்க்கத் தமரரு மடிபேணப்

பத்துத்தலை தக்கக் கணைதொடு
ஒற்றைக்கிரி மத்தைப் பொருதொரு
பட்டப்பகல் வட்டத் திகிரியி லிரவாகப்
பத்தற்கிர தத்தைக் கடவிய
பச்சைப்பயல் மெச்சத் தகுபொருள்
பக்ஷத்தொடு ரக்ஷித் தருள்வது மொருநாளே

தித்தித்தெய வொத்தப் பரிபுர
நிர்த்தப்பதம் வைத்துப் பயிரவி
திக்கொட்கந டிக்கக் கழுவொடு கழுதாடத்
திக்குப்பரி அட்டப் பயிரவர்
தொக்குத்தொகு தொக்குத் தொகுதொகு
சித்ரப்பவு ரிக்குத் த்ரிகடக எனவோதக்

கொத்துப்பறை கொட்டக் களமிசை
குக்குக்குகு குக்குக் குகுகுகு
குத்திப்புதை புக்குப் பிடியென முதுகூகை
கொட்புற்றெழ நட்பற் றவுணரை
வெட்டிப்பலி யிட்டுக் குலகிரி
குத்துப்பட வொத்துப் பொரவல பெருமாளே. 1

ஏறுமயி லேறிவிளை யாடுமுக மொன்றே
ஈசருடன் ஞானமொழி பேசுமுக மொன்றே
கூறுமடி யார்கள்வினை தீர்க்குமுக மொன்றே
குன்றுருவ வேல்வாங்கி நின்றமுக மொன்றே
மாறுபடு சூரரை வதைத்தமுக மொன்றே
வள்ளியை மணம்புணர வந்தமுக மொன்றே
ஆறுமுக மானபொருள் நீயருளல் வேண்டும்
ஆதியரு ணாசலம மர்ந்தபெரு மாளே. 2

கலைமேவு ஞானப் பிரகாசக்
கடலாடி ஆசைக் கடலேறி
பலமாய வாதிற் பிறழாதே
பதிஞான வாழ்வைத் தருவாயே
மலைமேவு மாயக் குறமாதின்
மனமேவு வாலக் குமரேசா
சிலைவேட சேவற் கொடியோனே
திருவாணி கூடற் பெருமாளே. 3

ஈனமிகுத் துளபிறவி யணுகாதே
யானுமுனக் கடிமையென வகையாக
ஞானஅருட் டனையருளி வினைதீர
நாணமகற் றியகருணை புரிவாயே
தானதவத் தினின்மிகுதி பெறுவோனே
சாரதியுத் தமிதுணைவ முருகோனே
ஆனதிருப் பதிகமரு ளிளையோனே
ஆறுதிருப் பதியில்வளர் பெருமாளே. 4

சந்ததம் பந்தத் தொடராலே
சஞ்சலந் துஞ்சித் திரியாதே
கந்தனென் றென்றுற் றுனைநாளும்
கண்டுகொண் டன்புற் றிடுவேனோ
தந்தியின் கொம்பைப் புணர்வோனே
சங்கரன் பங்கிற் சிவைபாலா
செந்திலங் கண்டிக் கதிர்வேலா
தென்பரங் குன்றிற் பெருமாளே. 5

இமராஜனி லாவதெ றிக்குங் கனலாலே
இளவாடையு மூருகொ றுக்கும் படியாலே
சமராகிய மாரனெ டுக்குங் கணையாலே
தனிமானுயிர் சோரும தற்கொன் றருள்வாயே
குமராமுரு காசடி லத்தன் குருநாதா
குறமாமக ளாசைத ணிக்குந் திருமார்பா
அமராவதி வாழ்வம ரர்க்கன் றருள்வோனே
அருணாபுரி வீதியி னிற்கும் பெருமாளே. 6

இயலிசையி லுசித வஞ்சிக் கயர்வாகி
இரவுபகல் மனது சிந்தித் துழலாதே
உயர்கருணை புரியு மின்பக் கடல்மூழ்கி
உனையெனது ளறியு மன்பைத் தருவாயே
மயில் தகர்க லிடைய ரந்தத் தினைகாவல்
வனசகுற மகளை வந்தித் தணைவோனே
கயிலைமலை யனைய செந்திற் பதிவாழ்வே
கரிமுகவ னிளைய கந்தப் பெருமாளே. 7

கீத விநோத மெச்சு குரலாலே
கீறு மையார் முடித்த குழலாலே
நீதி யிலாத ழித்து முழலாதே
நீமயி லேறி யுற்று வரவேணும்
சூதமர் சூர ருட்க பொருசூரா
சோண கிரியி லுற்ற குமரேசா
ஆதியர் காதொ ருச்சொ லருள்வோனே
ஆனை முகார்க னிட்ட பெருமாளே. 8

பாண மலரது தைக்கும் படியாலே
பாவி யிளமதி கக்குங் கனலாலே
நாண மழிய வுரைக்குங் குயிலாலே
நானு மயலி லிளைக்குந் தரமோதான்
சேணி லரிவை யணைக்குந் திருமார்பா
தேவர் மகுட மணக்குங் கழல்வீரா
காண அருணையில் நிற்குங் கதிர்வேலா
காலன் முதுகை விரிக்கும் பெருமாளே. 9

காமியத் தழுந்தி யிளையாதே
காலர்கைப் படிந்து மடியாதே
ஓமெழுத்தி லன்பு மிகவூறி
ஓவியத்தி லந்த மருள்வாயே
தூமமெய்க் கணிந்த சுகலீலா
சூரனைக் கடிந்த கதிர்வேலா
ஏமவெற் புயர்ந்த மயில்வீரா
ஏரகத் தமர்ந்த பெருமாளே. 10

திமிர வுதநி யனைய நரக
செனன மதனில் விடுவாயேல்
செவிடு குருடு வடிவு குறைவு
சிறிது மிடியு மணுகாதே
அமரர் வடிவு மதிக குலமு
மறிவு நிறையும் வரவேநின்
அருள தருளி யெனையு மனதொ
டடிமை கொளவும் வரவேணும்
சமர முகவெ லசுரர் தமது
தலைக ளுருள மிகவேநீள்
சலதி யலற நெடிய பதலை
தகர அயிலை விடுவோனே
வெமர வணையி லினிது துயிலும்
விழிகள் நளினன் மருகோனே
மிடறு கரியர் குமர பழநி
விரவு மமரர் பெருமாளே. 11

அற்றைக் கிரைதேடி அத்தத் திலுமாசை
பற்றித் தவியாத பற்றைப் பெறுவேனோ
வெற்றிக் கதிர்வேலா வெற்பைத் தொளைசீலா
கற்றுற் றுணர்போதா கச்சிப் பெருமாளே. 12

இரவுபகற் பலகாலும் இயலிசைமுத் தமிழ்கூறித்
திரமதனைத் தெளிவாகத் திருவருளைத் தருவாயே
பரகருணைப் பெருவாழ்வே பரசிவதத் துவஞானா
அரனருள்சற் புதல்வோனே அருணகிரிப் பெருமாளே. 13



## 5. வள்ளலார் அருளிய பாடல்கள்

### அ) தெய்வமணி மாலை

ஒருமையுடன் நினதுதிரு மலரடி நினைக்கின்ற
உத்தமர்தம் உறவுவேண்டும்
உள்ஒன்று வைத்துப் புறம்பொன்று பேசுவார்
உறவுகல வாமைவேண்டும்
பெருமைபெறு நினதுபுகழ் பேசவேண்டும் பொய்ம்மை
பேசா திருக்கவேண்டும்
பெருநெறி பிடித்தொழுக வேண்டும்மத மானபேய்
பிடியா திருக்கவேண்டும்
மருவுபெண் ஆசையை மறக்கவே வேண்டும்உனை
மறவா திருக்கவேண்டும்
மதிவேண்டும் நின்கருணை நிதிவேண்டும் நோயற்ற
வாழ்வில்நான் வாழவேண்டும்
தருமமிகு சென்னையில் கந்தகோட் டத்துள்வளர
தலம்ஓங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே.



## ஆ) கந்தர் சரணப் பத்து

அருளார் அமுதே சரணம் சரணம்
அழகா அமலா சரணம் சரணம்
பொருளா எனைஆள் புனிதா சரணம்
பொன்னே மணியே சரணம் சரணம்
மருள்வார்க் கரியாய் சரணம் சரணம்
மயில்வா கனனே சரணம் சரணம்
கருணா லயனே சரணம் சரணம்
கந்தா சரணம் சரணம் சரணம் 1

நடவும் தனிமா மயிலோய் சரணம்
நல்லார் புகழும் வல்லோய் சரணம்
திடமும் திருவும் தருவோய் சரணம்
தேவர்க் கரியாய் சரணம் சரணம்
தடவண் புயனே சரணம் சரணம்
தனிமா முதலே சரணம் சரணம்
கடவுள் மணியே சரணம் சரணம்
கந்தா சரணம் சரணம் சரணம் 2



## இ) பிரார்த்தனை மாலை

அன்னே எனைத்தந்த அப்பாஎன் றேங்கி அலறுகின்றேன்
என்னேஇவ் வேழைக் கிரங்காது நீட்டித் திருத்தல்எந்தாய்
பொன்னே சுகுணப் பொருப்பே தணிகைப் பொருப்பமர்ந்த
மன்னே கலப மயில்மேல் அழகிய மாமணியே. 1

குருவே அயன்அரி ஆதியர் போற்றக் குறைதவிர்ப்பான்
வருவேல் பிடித்து மகிழ்வள்ள லேகுண மாமலையே
தருவே தணிகைத் தயாநிதி யேதுன்பச் சாகரமாம்
கருவேர் அறுத்(து)இக் கடையனைக் காக்கக் கடன்உனக்கே 2



## ஈ) போற்றித் திருவிருத்தம்

முருகநின் பாதம் போற்றி
முளரியங் கண்ணற் கன்பாம்
மருகநின் கழல்கள் போற்றி
வானவர் முதல்வ போற்றி
பெருகருள் வாரி போற்றி
பெருங்குணப் பொருப்பே போற்றி
தருகநின் கருணை போற்றி
சாமிநின் அடிகள் போற்றி.



## உ) தனித் திருத்தொடை

ஆறுமு கங்கொண்ட ஐயாஎன் துன்பம் அனைத்தும்இன்னும்
ஏறுமு கங்கொண்ட தல்லால் இறங்கு முகம்இலையால்
வீறுமு கங்கொண்ட கைவேலின் வீரம் விளங்கஎன்னைச்
சீறுமு கங்கொண்ட அத்துன்பம் ஓடச் செலுத்துகவே.



## வாழ்த்துப் பா

வான்முகில் வழாது பெய்க!
மலிவளஞ் சுரக்க! மன்னன்
கோன்முறை அரசு செய்க!
குறைவிலா(து) உயிர்கள் வாழ்க!
நான்மறை அறங்கள் ஓங்க!
நற்றவம் வேள்வி மல்க!
மேன்மைகொள் சைவ நீதி
விளங்குக உலக மெல்லாம்!

— கந்தபுராணம்



# சிவபெருமான் ஸ்தோத்திரங்கள்

## 1. மாணிக்கவாசகர் அருளிய திருவாசகம்

### அ) சிவபுராணம்

### (எல்லா நலன்களும் அருளும் பதிகம்)

திருச்சிற்றம்பலம்

நமச்சிவாய வா(அ)ழ்க நாதன்தாள் வாழ்க
இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க
கோகழி ஆண்ட குருமணிதன் தாள்வாழ்க
ஆகம மாகிநின் றண்ணிப்பான் தாள்வாழ்க
ஏகன் அனேகன் இறைவ னடிவாழ்க

வேகங் கெடுத்தாண்ட வேந்தனடி வெல்க
பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்தன் பெய்கழல்கள் வெல்க
புறத்தார்க்குச் சேயோன்தன் பூங்கழல்கள் வெல்க
கரங்குவிவார் உள்மகிழும் கோன் கழல்கள் வெல்க
சிரங்குவிவார் ஓங்குவிக்கும் சீரோன் கழல் வெல்க

ஈசன் அடி போற்றி எந்தை அடி போற்றி
தேசன் அடி போற்றி சிவன் சேவடிபோற்றி
நேயத்தே நின்ற நிமலன் அடிபோற்றி
மாயப் பிறப்பறுக்கும் மன்னன் அடிபோற்றி
சீரார் பெருந்துறைநம் தேவன் அடிபோற்றி

ஆராத இன்பம் அருளும்மலை போற்றி
சிவன் அவனென் சிந்தையுள் நின்ற அதனால்
அவன் அருளாலே அவன்தாள் வணங்கிச்
சிந்தை மகிழச் சிவபுராணம் தன்னை
முந்தை வினைமுழுதும் ஓய உரைப்பன்யான்

கண்ணுதலான் தன்கருணைக் கண்காட்ட வந்தெய்தி
எண்ணுதற்கு எட்டா எழிலார் கழலிறைஞ்சி
விண்ணிறைந்து மண்ணிறைந்து மிக்காய் விளங்கொளியாய்
எண்ணிறந்து எல்லை இலாதானே நின்பெருஞ்சீர்
பொல்லா வினையேன் புகழுமாறு ஒன்றறியேன்

புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய் தேவராய்
செல்லாஅ நின்றஇத் தாவர சங்கமத்துள்

எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்
மெய்யேஉன் பொன்னடிகள் கண்டு இன்று வீடுற்றேன்
உய்யஎன் உள்ளத்துள் ஓங்கார மாய்நின்ற
மெய்யா விமலா விடைப்பாகா வேதங்கள்
ஐயா எனஓங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே

வெய்யாய் தணியாய் இயமான னாம்விமலா
பொய்யாயின வெல்லாம் போய் அகல வந்தருளி
மெய்ஞ்ஞான மாகிமிளிர்கின்ற மெய்ச்சுடரே
எஞ்ஞானம் இல்லாதேன் இன்பப் பெருமானே
அஞ்ஞானம் தன்னை அகல்விக்கும் நல்லறிவே

ஆக்கம் அளவிறுதி இல்லாய் அனைத்துலகும்
ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருள்தருவாய்
போக்குவாய் என்னைப் புகுவிப்பாய் நின்தொழும்பில்
நாற்றத்தின் நேரியாய் சேயாய் நணியானே
மாற்றம் மனம்கழிய நின்ற மறையோனே

கறந்தபால் கன்னலோடு நெய்கலந்தாற் போலச்
சிறந்தடியார் சிந்தனையுள் தேனூறி நின்று
பிறந்த பிறப்பறுக்கும் எங்கள் பெருமான்
நிறங்களோர் ஐந்துடையாய் விண்ணோர்கள் ஏத்த
மறைந்திருந்தாய் எம்பெருமான் வல்வினையேன் தன்னை

மறைந்திட மூடிய மாய இருளை
அறம்பாவம் என்னும் அருங்கயிற்றால் கட்டிப்
புறம்தோல் போர்த்தெங்கும் புழுவழுக்கு மூடி
மலஞ்சோரும் ஒன்பது வாயிற் குடிலை
மலங்கப் புலனைந்தும் வஞ்சனையைச் செய்ய

விலங்கு மனத்தால் விமலா உனக்குக்
கலந்த அன்பாகிக் கசிந்துஉள் உருகும்
நலந்தான் இலாத சிறியேற்கு நல்கி
நிலந்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காட்டி
நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்குத்

தாயிற் சிறந்த தயாவான தத்துவனே
மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே
தேசனே தேனார் அமுதே சிவபுரனே
பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனே
நேசவருள் புரிந்து நெஞ்சில் வஞ்சங்கெடப்

பேராது நின்ற பெருங்கருணைப் பேராறே
ஆரா அமுதே அளவிலாப் பெம்மானே
ஓராதார் உள்ளத்து ஒளிக்கும் ஒளியானே
நீராய் உருக்கியென் ஆருயிராய் நின்றானே
இன்பமும் துன்பமும் இல்லானே உள்ளானே

அன்பருக்கு அன்பனே யாவையுமாய் அல்லையுமாம்
சோதியனே துன்னிருளே தோன்றாப் பெருமையனே
ஆதியனே அந்தம் நடுவாகி அல்லானே
ஈர்த்துஎன்னை யாட்கொண்ட எந்தை பெருமானே
கூர்த்தமெய்ஞ் ஞானத்தால் கொண்டுணர்வார் தம்கருத்தின்

நோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே
போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே
காக்கும்எம் காவலனே காண்பரிய பேரொளியே
ஆற்றின்ப வெள்ளமே அத்தாமிக்காய் நின்ற
தோற்றச் சுடர்ஒளியாய்ச் சொல்லாத நுண்ணுணர்வாய்

மாற்றமாம் வையகத்தின் வெவ்வேறே வந்தறிவாம்
தேற்றனே தேற்றத் தெளிவேஎன் சிந்தனையுள்
ஊற்றான உண்ணார் அமுதே உடையானே
வேற்று விகார விடக்குடம்பின் உட்கிடப்ப
ஆற்றேன் எம்ஐயா அரனேயோ என்றென்று

போற்றிப் புகழ்ந்திருந்து பொய்கெட்டு மெய்யானார்
மீட்டிங்கு வந்து வினைப்பிறவி சாராமே
கள்ளப் புலக்குரம்பை கட்டழிக்க வல்லானே
நள்ளிருளில் நட்டம் பயின்றாடும் நாதனே
தில்லையுள் கூத்தனே தென்பாண்டி நாட்டானே

அல்லல் பிறவி அறுப்பானே ஓ என்று
சொல்லற்கு அரியானைச் சொல்லித் திருவடிக்கீழ்ச்
சொல்லிய பாட்டின் பொருள்உணர்ந்து சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தின் உள்ளார் சிவனடிக்கீழ்ப்
பல்லோரும் ஏத்தப் பணிந்து.

*திருச்சிற்றம்பலம்*



## *ஆ) திருச்சாழல் (சில பாடல்கள்)*

*திருச்சிற்றம்பலம்*

பூசுவதும் வெண்ணீறு பூண்பதுவும் பொங்கரவம்
பேசுவதும் திருவாயால் மறைபோலும் காணேடீ
பூசுவதும் பேசுவதும் பூண்பதுவும் கொண்டென்னை
ஈசனவன் எவ்வுயிர்க்கும் இயல்பானான் சாழலோ. 1

என்னப்பன் எம்பிரான் எல்லார்க்கும் தான்ஈசன்
துன்னம்பெய் கோவணமாக் கொள்ளுமது என்னேடீ
மன்னுகலை துன்னுபொருள் மறைநான்கே வான்சரடாத்
தன்னையே கோவணமாச் சாத்தினன்காண் சாழலோ. 2

கோயில் சுடுகாடு கொல்புலித்தோல் நல்லாடை
தாயும்இலி தந்தைஇலி தான்தனியன் காணேடீ
தாயும்இலி தந்தைஇலி தான்தனியன் ஆயிடினும்
காயில் உலகனைத்தும் கற்பொடிகாண் சாழலோ. 3

அயனை அனங்கனை அந்தகனைச் சந்திரனை
வயனங்கள் மாயாவடுச் செய்தான் காணேடீ
நயனங்கள் மூன்றுடைய நாயகனே தண்டித்தால்
சயமன்றோ வானவர்க்குத் தாழ்குழலாய் சாழலோ. 4

கான்ஆர் புலித்தோல் உடைதலை ஊண்காடுபதி
ஆனால் அவனுக்கு இங்கு ஆட்படுவார் ஆரேடீ
ஆனாலும் கேளாய் அயனும் திருமாலும்
வான்நாடர் கோவும் வழியடியார் சாழலோ. 5

கடகரியும் பரிமாவும் தேரும்உகந்து ஏறாதே
இடபம்உகந்து ஏறியவாறு எனக்கறிய இயம்பேடீ
தடமதில்கள் அவைமூன்றும் தழல்எரித்த அந்நாளில்
இடபமது ஆய்த்தாங்கினான் திருமால்காண் சாழலோ. 6

அம்பலத்தே கூத்தாடி அமுதுசெயப் பலிதிரியும்
நம்பனையும் தேவனென்று நண்ணுமது என்னேடீ
நம்பனையும் ஆமாகேள் நான்மறைகள் தாமறியா
எம்பெருமான் ஈசாஎன்று ஏத்தினகாண் சாழலோ. 7

சலமுடைய சலந்தரன்தன் உடல்தடிந்த நல்லாழி
நலமுடைய நாரணற்கு அன்று அருளியவாறு என்னேடீ
நலமுடைய நாரணன்தன் நயனம்இடந்து அரன்அடிக்கீழ்
அலர்ஆக இடஅழி அருனின்காண் சாழலோ. 8

அருந்தவருக்கு ஆலின்கீழ் அறம்முதலா நான்கனையும்
இருந்தவருக்கு அருரளும்அது எனக்கறிய இயம்பேடீ
அரும்தவருக்கு அறமுதல்நான்கு அன்றருளிச் செய்திலனேல்
திருத்தவருக்கு உலகியற்கை தெரியாகாண் சாழலோ. 9

திருச்சிற்றம்பலம்



## இ) திருவாசகம் (சில பாடல்கள்)

திருச்சிற்றம்பலம்

வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி
ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்க்
கோனாகி யானெனதென்றவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயையென் சொல்லி வாழ்த்துவனே! 1

அம்மையே அப்பா ஒப்பிலாமணியே
அன்பினில் விளைந்த ஆரமுதே
பொய்ம்மையே பெருக்கிப் பொழுதினைச்
சுருக்கும் புழுத்தலைப் புலையனேன் தனக்குச்
செம்மையே ஆய சிவபதமளித்த
செல்வமே சிவபெருமானே
இம்மையே உன்னை சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந்து அருளுவது இனியே. 2

வேண்டத்தக்கது அறிவோய் நீ
வேண்டமுழுதும் தருவோய் நீ
வேண்டும் அயன் மாற்கு அரியோய் நீ
வேண்டி என்னைப் பணி கொண்டாய்
வேண்டி நீயாது அருள் செய்தாய்
யானும் அதுவே வேண்டின் அல்லால்
வேண்டும் பரிசொன்று உண்டென்னில்
அதுவும் உன்தன் விருப்பன்றே. 3

அன்றே என்தன் ஆவியும்
உடலும் உடைமை எல்லாமும்
குன்றே அனையாய் என்னை ஆட்
கொண்டபோதே கொண்டிலையோ
இன்றுஓர் இடையூறு எனக்கு உண்டோ
எண்தோள் முக்கண் எம்மானே
நன்றே செய்வாய் பிழைசெய்வாய்
நானே இதற்கு நாயகமே. 4

உடையாள் உன்றன் நடுவிருக்கும்
உடையாள் நடுவுள் நீயிருத்தி
அடியேன் நடுவுள் இருவீரும்
இருப்பதானால் அடியேனுன்
அடியார் நடுவுள் இருக்கும்
அருளைப்புரியாய் பொன்அம்பலத்துளம்
முடியா முதலே என்கருத்து
முடியும் வண்ணம் முன்நின்றே. 5

திருச்சிற்றம்பலம்



## 2. திருவாசகச் சிறப்பு

அருள்வாத வூரர்சொல அம்பலவர் தாமெழுதும்
திருவாசகத்தைத் தெளிந்தால் – கருவாம்
பவகதியும் நீங்கிப் பரம ரருளாலே
சிவகதியும் உண்டாம் சிவம். 1

கற்பாந்த காலம் கடவாக் கடல்கடக்கத்
தெப்பமாய் வந்தெனக்குச் சேர்ந்ததே – அப்பன்
உருவாசகங் கொண்டுரைத்த தமிழ்மாலை
திருவாசகம் என்னும் தேன். 2

தொல்லை இரும்பிறவிச் சூழும் தளைநீக்கி
அல்லலறுத்து ஆனந்தம் ஆக்கியதே – எல்லை
மருவா நெறியளிக்கும் வாதவூர் எம்கோன்
திருவாசகம் என்னும் தேன். 3

போதலர்ந்து தேன்சொரியும் பொன்னம் பலத்திலுறை
வாதவூர் எங்கோமான் வாசகத்தை – ஓதிப்
பிறவிப் பிணிநீக்கிப் பேரின்ப வெள்ளச்
செறிவுக்குள் செல்வர் சிறந்து. 4

தேவர் குறளும் திருநான் மறைமுடிவும்
மூவர் தமிழும் முனிமொழியும் – கோவை
திருவாசகமும் திருமூலர் சொல்லும்
ஒருவாசகமென் றுணர். 5

வான்கலந்த மாணிக்க வாசகநின் வாசகத்தை
நான்கலந்து பாடுங்கால் நற்கருப்பஞ் சாற்றினிலே
தேன்கலந்து பால்கலந்து செழுங்கனித்தீஞ் சுவைக்கலந்தென்
ஊன்கலந்து உயிர்கலந்து உவட்டாமல் இனிப்பதுவே. 6

தேனூறும் வாசகங்கள் அறுநூறும் திருக்கோவை
நானூறும் அமுதூற மொழிந்தருளும் நாயகனை
வானூறும் கங்கைநிகர் மாணிக்க வாசகனார்
யான்ஊறு படாதவனாக இருபோதும் இறைஞ்சுவனே. 7



# 3. திருநாவுக்கரசர் அருளிய தேவாரம்

## அ) நமச்சிவாயத் திருப்பதிகம்

திருச்சிற்றம்பலம்

சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சிவாயவே. 1

பூவினுக்கு அருங்கலம் பொங்கு தாமரை
ஆவினுக்கு அருங்கலம் அரன் அஞ்சாடுதல்
கோவினுக்கு அருங்கலம் கோட்டம் இல்லது
நாவினுக்கு அருங்கலம் நமச்சிவாயவே. 2

விண்ணுற அடுக்கிய விறகின் வெவ்வழல்
உண்ணிய புகிலவை ஒன்றும் இல்லையாம்
பண்ணிய உலகினிற் பயின்ற பாவத்தை
நண்ணிநின்று அறுப்பது நமச்சிவாயவே. 3

இடுக்கண்பட் டிருக்கினும் இரந்து யாரையும்
விடுக்கிற் பிரானென்று வினவுவோம் அல்லோம்
அடுக்கற்கீழ் கிடக்கினும் அருளின் நாம்உற்ற
நடுக்கத்தைக் கெடுப்பது நமச்சிவாயவே. 4

வெந்தநீறு அருங்கலம் விர திகட்கெலாம்
அந்தணர்க்கு அருங்கலம் அருமறை ஆறங்கம்
திங்களுக்கு அருங்கலம் திகழும் நீண்முடி
நங்களுக்கு அருங்கலம் நமச்சிவாயவே. 5

சலமிலன் சங்கரன் சார்ந்தவர்க்கு அல்லால்
நலமிலன் நாள்தொறும் நல்கு வான்நலன்
குலமிலா் ஆகினுங் குலத்துக்கு ஏற்பதோர்
நலமிகக் கொடுப்பது நமச்சிவாயவே. 6

வீடினார் உலகினில் விழுமிய தொண்டர்கள்
கூடினார் அந்நெறி கூடச் சென்றலும்

ஓடினேன் ஓடிச்சென்று உருவங் காண்டலும்
நாடினேன் நாடிற்று நமச்சிவாயவே. 7

இல்லக விளக்கது இருள் கெடுப்பது
சொல்லக விளக்கது சோதி யுள்ளது
பல்லக விளக்கது பலரும் காண்பது
நல்லக விளக்கது நமச்சிவாயவே. 8

முன்னெறியாகிய முதல்வன் முக்கணன்
தந்நெறி யேசரண் ஆதல் திண்ணமே
அந்நெறி யேசென்றங்கு அடைந்த வர்க்கெலாம்
நன்னெறி யாவது நமச்சிவாயவே. 9

மாப்பிணை தழுவிய மாதோர் பாகத்தன்
பூப்பிணை திருந்தடி பொருந்தக் கைதொழ
நாப்பிணை தழுவிய நமச்சி வாயப்பத்து
ஏத்தவல் லார்தமக்கு இடுக்கண் இல்லையே. 10

*திருச்சிற்றம்பலம்*



## ஆ) திருக்கயிலாயம் போற்றித் திருத்தாண்டகம்

*திருச்சிற்றம்பலம்*

வேற்றாகி விண்ணாகி நின்றாய் போற்றி
மீளாமே ஆளென்னைக் கொண்டாய் போற்றி
ஊற்றாகி உள்ளே ஒளித்தாய் போற்றி
ஓவாத சத்தத் தொலியே போற்றி
ஆற்றாகி அங்கே அமர்ந்தாய் போற்றி
ஆறங்கம் நால்வேதம் ஆனாய் போற்றி
காற்றாகி எங்கும் கலந்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 1

பிச்சாடல் பேயோ டுகந்தாய் போற்றி
பிறவி அறுக்கும் பிரானே போற்றி
வைச்சாடல் நன்று மகிழ்ந்தாய் போற்றி
மருவிஎன் சிந்தை புகுந்தாய் போற்றி

பொய்ச்சார் புரம்மூன்றும் எய்தாய் போற்றி
போகாதென் சிந்தை புகுந்தாய் போற்றி
கச்சாக நாகம் அசைத்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 2

மருவார் புரம்மூன்றும் எய்தாய் போற்றி
மருவிஎன் சிந்தை புகுந்தாய் போற்றி
உருவாகி என்னைப் படைத்தாய் போற்றி
உள்ளாவி வாங்கி ஒளித்தாய் போற்றி
திருவாகி நின்ற திறமே போற்றி
தேசம் பரவப் படுவாய் போற்றி
கருவாகி ஓடும் முகிலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 3

வானத்தார் போற்றும் மருந்தே போற்றி
வந்தென்றன் சிந்தை புகுந்தாய் போற்றி
ஊனத்தை நீக்கும் உடலே போற்றி
ஓங்கி அழலாய் நிமிர்ந்தாய் போற்றி
தேனத்தை வார்த்த தெளிவே போற்றி
தேவர்க்கும் தேவனாய் நின்றாய் போற்றி
கானத் தீஆடல் உகந்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 4

ஊராகி நின்ற உலகே போற்றி
ஓங்கி அழலாய் நிமிர்ந்தாய் போற்றி
பேராகி எங்கும் பரந்தாய் போற்றி
பெயராதென் சிந்தை புகுந்தாய் போற்றி
நீராவி ஆன நிழலே போற்றி
நேர்வார் ஒருவரையும் இல்லாய் போற்றி
காராகி நின்ற முகிலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 5

சில்லுருவாய்ச் சென்று திரண்டாய் போற்றி
தேவர் அறியாத தேவே போற்றி
புல்லுயிர்க்கும் பூட்சி புணர்ந்தாய் போற்றி
போகாதென் சிந்தை புகுந்தாய் போற்றி

பல்லுயிராய்ப் பார்தோறும் நின்றாய் போற்றி
பற்றி உலகை விடாதாய் போற்றி
கல்லுயிராய் நின்ற கனலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 6

பண்ணின் இசையாகி நின்றாய் போற்றி
பாவிப்பார் பாவம் அறுப்பாய் போற்றி
எண்ணும் எழுத்தும் சொல்ஆனாய் போற்றி
என்சிந்தை நீங்கா இறைவா போற்றி
விண்ணும் நிலனும் தீயானாய் போற்றி
மேலவர்க்கும் மேலாகி நின்றாய் போற்றி
கண்ணின் மணியாகி நின்றாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 7

இமையாது உயிராது இருந்தாய் போற்றி
என்சிந்தை நீங்கா இறைவா போற்றி
உமைபாகம் ஆகத் தணைத்தாய் போற்றி
ஊழியேழ் ஆன ஒருவா போற்றி
அமையா வருநஞ்சம் ஆர்ந்தாய் போற்றி
ஆதி புராணனாய் நின்றாய் போற்றி
கமையாகி நின்ற கனலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 8

மூவாய் பிறவாய் இறவாய் போற்றி
முன்னமே தோன்றி முளைத்தாய் போற்றி
தேவாதிதேவர் தொழும் தேவே போற்றி
சென்றுஏறி எங்கும் பரந்தாய் போற்றி
ஆவா அடியேனுக்கு எல்லாம் போற்றி
அல்லல் நலிய அலந்தேன் போற்றி
காவாய் கனகத் திரளே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 9

நெடிய விசும்போடு கண்ணே போற்றி
நீள அகலம் உடையாய் போற்றி
அடியும் முடியும் இகலிப் போற்றி
அங்கொன்று அறியாமை நின்றாய் போற்றி

கொடியவன் கூற்றம் உதைத்தாய் போற்றி
கோயிலா என்சிந்தை கொண்டாய் போற்றி
கடிய உருமொடு மின்னே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 10

உண்ணாது உறங்காது இருந்தாய் போற்றி
ஓதாதே வேதம் உணர்ந்தாய் போற்றி
எண்ணா இலங்கைக்கோன் தன்னைப் போற்றி
இறைவிரலால் வைத்துகந்த ஈசா போற்றி
பண்ணார் இசையின்சொல் கேட்டாய் போற்றி
பண்டே என்சிந்தை புகுந்தாய் போற்றி
கண்ணாய் உலகுக்கு நின்றாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 11

திருச்சிற்றம்பலம்



## இ) பொது திருப்பதிகம்

திருச்சிற்றம்பலம்

அப்பன்நீ அம்மைநீ ஐயனும் நீ
அன்புடைய மாமனும் மாமியும் நீ
ஒப்புடைய மாதரும் ஒண்பொருளும் நீ
ஒருகுலமும் சுற்றமும் ஓர் ஊரும் நீ
துய்ப்பனவும் உய்ப்பனவும் தோற்றுவாய் நீ
துணையாய் என் நெஞ்சம் துறப்பிப்பாய் நீ
இப்பொன்நீ இம்மணிநீ இம்முத்தும் நீ
இறைவன்நீ ஏறு ஊர்ந்த செல்வன் நீயே. 1

வெம்ப வருகிற்பது அன்று கூற்றம் நம்மேல்
வெய்ய வினைப்பகையும் பைய நையும்
எம் பரிவு தீர்ந்தோம் இடுக்கண் இல்லோம்
எங்கு எழில் என் ஞாயிறு எளியோம் அல்லோம்
அம் பவளச்செஞ்சடைமேல் ஆறுசூடி
அனல்ஆடி ஆன்அஞ்சும் ஆட்டு உகந்த
செம்பவளவண்ணர் செங்குன்றவண்ணர்
செவ்வானவண்ணர் என் சிந்தையாரே. 2

ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடாதாரே
அடக்குவித்தால் ஆரொருவர் அடங்காதாரே
ஓட்டுவித்தால் ஆரொருவர் ஓடாதாரே
உருகுவித்தால் ஆரொருவர் உருகாதாரே
பாட்டுவித்தால் ஆரொருவர் பாடாதாரே
பணிவித்தால் ஆரொருவர் பணியாதாரே
காட்டுவித்தால் ஆரொருவர் காணாதாரே
காண்பார் ஆர் கண்ணுதலாய்க் காட்டாக்காலே. 3

நல் பதத்தார் நல் பதமே ஞானமூர்த்தீ
நலஞ்சுடரே நால்வேதத்து அப்பால் நின்ற
சொல் பதத்தார் சொல் பதமும் கடந்து நின்ற
சொலற்கு அரிய சூழலாய் இது உன் தன்மை
நிற்பது ஒத்து நிலை இலா நெஞ்சம்தன்னுள்
நிலாவாத புலால்உடம்பே புகுந்து நின்ற
கற்பகமே யான் உன்னை விடுவேன் அல்லேன்
கனகம் மாமணி நிறத்து எம் கடவுளானே. 4

திருக்கோயில் இல்லாத திருஇல் ஊரும்
திருவெண்நீறு அணியாத திருஇல் ஊரும்
பருகக்கோடிப் பத்திமையால் பாடா ஊரும்
பாங்கினோடு பலதளிகள் இல்லா ஊரும்
விருப்போடு வெண்சங்கம் ஊதா ஊரும்
விதானமும் வெண்கொடியும் இல்லா ஊரும்
அருப்போடு மலர் பறித்து இட்டு உண்ணா ஊரும்
அவைஎலாம் ஊர் அல்ல அடவி காடே. 5

திருநாமம் அஞ்சுஎழுத்தும் செப்பார் ஆகில்
தீவண்ணார் திறம் ஒரு கால் பேசார் ஆகில்
ஒருகாலும் திருக்கோயில் சூழார் ஆகில்
உண்பதன்முன் மலர்பறித்து இட்டுஉண்ணார் ஆகில்
அருநோய்கள் கெட வெண்நீறு அணியார் ஆகில்
அளி அற்றார் பிறந்தவாறு ஏதோ என்னில்

பெரு நோய்கள் மிக நலியப் பெயர்த்தும் செத்தும்
பிறப்பதற்கே தொழில்ஆகி இறக்கின்றாரே. 6

நின்ஆவார் பிறர் இன்றி நீயே ஆனாய்
நினைப்பார்கள் மனத்துக்கு ஓர் வித்தும்ஆனாய்
மன்ஆனாய் மன்னவர்க்கு ஓர் அமுதம்ஆனாய்
மறைநான்கும் ஆனாய் ஆறுஅங்கம் ஆனாய்
பொன்ஆனாய் மணிஆனாய் போகம் ஆனாய்
பூமிமேல் புகழ் தக்க பொருளே உன்னை
என்ஆனாய் என்ஆனாய் என்னில் அல்லால்
ஏழையேன் என் சொல்லி ஏத்துகேனே. 7

அத்தா உன் அடியேனை அன்பால் ஆர்த்தாய்
அருள்நோக்கில் தீர்த்தநீர் ஆட்டிக்கொண்டாய்
எத்தனையும் அரியை நீ எளியைஆனாய்
எனை ஆண்டுகொண்டு இரங்கி ஏன்றுகொண்டாய்
பித்தனேன் பேதையேன் பேயேன் நாயேன்
பிழைத்தனகள் அத்தனையும் பொறுத்தாய் அன்றே
இத்தனையும் எம் பரமோ ஐய ஐயோ
எம்பொருமான் திருக்கருணை இருந்தவாறே. 8

குலம்பொல்லேன் குணம் பொல்லேன் குறியும் பொல்லேன்
குற்றமே பெரிது உடையேன் கோலமாய
நலம் பொல்லேன் நான் பொல்லேன் ஞானிஅல்லேன்
நல்லாரோடு இசைந்திலேன் நடுவே நின்ற
விலங்கு அல்லேன் விலங்குஅல்லாது ஒழிந்தேன்அல்லேன்
வெறுப்பனவும் மிகப் பெரிதும் பேச வல்லேன்
இலம் பொல்லேன் இரப்பதே ஈயமாட்டேன்
என் செய்வான் தோன்றினேன் ஏழையேனே. 9

சங்கநிதி பதுமநிதி இரண்டும் தந்து
தரணியொடு வான் ஆளத் தருவரேனும்
மங்குவார் அவர்செல்வம் மதிப்போம் அல்லோம்
மாதேவர்க்கு ஏகாந்தர் அல்லார் ஆகில்

அங்கமெலாம் குறைந்து அழுகு தொழுநோயராய்
ஆவுரித்துத் தின்று உழலும் புலையரேனும்
கங்கைவார் சடைக்கரந்தார்க்கு அன்பராகில்
அவர்கண்டீர் நாம் வணங்கும் கடவுளாரே. 10

திருச்சிற்றம்பலம்



## ஈ) தேவாரம் (சில பாடல்கள்)

திருச்சிற்றம்பலம்

நமச்சி வாயவே ஞானமும் கல்வியும்
நமச்சி வாயவே நானறி விச்சையும்
நமச்சி வாயவே நாநவின் றேத்துமே
நமச்சி வாயவே நன்னெறி காட்டுமே. 1

நம் கடம்பனைப் பெற்றவள் பங்கினள்
தென் கடம்பைத் திருக்கரக் கோயிலான்
தன் கடன் அடியேனையுந் தாங்குதல்
என் கடன் பணிசெய்து கிடப்பதே. 2

சமர சூரபன்மாவைத் தடிந்தவேற்
குமரன் தாதைநற் கோழம்பம் மேவிய
அமரர்கோவினுக்கு அன்புடைத் தொண்டர்கள்
அமர லோகமது ஆளுடையார்களே. 3

ஆதியும் அறிவுமாகி அறிவினுள் செறிவுமாகிச்
சோதியுள் சுடருமாகித் தூநெறிக்கு ஒருவனாகிப்
பாதியிற் பெண்ணுமாகிப் பரவுவார் பாங்கனாகி
வேதியர் வாழும் சேய்ஞல் விரும்பும் ஆப்பாடியாரே. 4

குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயிற் குமிண்சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல் மேனியிற் பால்வெண்ணீறும்
இனித்தம் உடைய எடுத்தபொற் பாதமும் காணப்பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே. 5

நல்லானை நல்லான நால்மறையோடு ஆறு அங்கம்
வல்லானை வல்லார்கள் மனத்து உறையும் மைந்தனைச்
சொல்லானைச் சொல் ஆர்ந்த பொருளானைத் துகள்ஏதும்
இல்லானை எம்மானை என் மனத்தே வைத்தேனே. 6

மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே.
ஈசன் எந்தை இணையடி நீழலே. 7

அன்னம் பாலிக்கும் தில்லைச் சிற்றம்பலம்
பொன்னம் பாலிக்கும் மேலுமிப் பூமிசை
என்னம் பாலிக்குமாறு கண்டு இன்புற
இன்னம் பாலிக்குமோ இப்பிறவியே. 8

புழுவாய் பிறக்கினும் புண்ணியா உன்னடி என்மனத்தே
வழுவா திருக்க வரந்தர வேண்டும்இவ் வையகத்தே
தொழுவார்க் கிரங்கி இருந்தருள் செய்பா திரிப்புலியூர்
செழுநீர்ப் புனற்கங்கை செஞ்சடை மேல்வைத்த
தீவண்ணனே. 9

கற்றுணை வில்லதாகக் கடியரண் செற்றார் போலும்
பொற்றுணைப் பாதர் போலும் புலி அதள் உடையார் போலும்
சொற்றுணை மாலைகொண்டு தொழுது எழுவார்கட்கெல்லாம்
நற்றுணை யாவர் போலும் நாக ஈச்சரவனாரே. 10

விண்ணினார் விண்ணின் மிக்கார் வேதங்கள் நான்கும் அங்கம்
பண்ணினார் பண்ணின் மிக்க பாடலார் பாவம் தீர்க்கும்
கண்ணினார் கண்ணின் மிக்க நுதலினார் காமற் காய்ந்த
எண்ணினார் எண்ணின் மிக்கார் இடைமருது
இடங்கொண்டாரே. 11

அல்லலாக ஐம்பூதங்கள் ஆட்டினும்
வல்லவாறு சிவாய நம என்று
நல்லம் மேவிய நாதன் அடிதொழ
வெல்ல வந்த வினைப்பகை வீடுமே. 12

கோடி மாதவங்கள் செய்து குன்றினார் தம்மை எல்லாம்
வீடவே சக்கரத்தால் எறிந்துபின் அன்பு கொண்டு
தேடிமால் செய்த கோயில் திரு இராமேச்சுரத்தை
நாடிவாழ் நெஞ்சமே! நீ நன்னெறி ஆகுமென்றே. 13

கருவாய்க் கிடந்து உன்கழலே நினையும் கருத்து உடையேன்
உருவாய்த் தெரிந்து உன்றன் நாமம் பயின்றேன் உனதருளால்
திருவாய்பொலியச் சிவாயநம என்று நீறு அணிந்தேன்
தருவாய் சிவகதி நீ பாதிரிப் புலியூர் அரனே. 14

ஓதிமா மலர்கள் தூவி உமையவள் பங்கா! மிக்க
சோதியே! துளங்கும் எண்தோள் சுடர்மழுப் படையினானே!
ஆதியே! அமரர் கோவே! அணி அணாமலை உளானே!
நீதியால் நின்னை அல்லால் நினையுமா நினைவிலேனே! 15

காயமே கோயில் ஆகக் கடிமனம் அடிமை யாக
வாய்மையே தூய்மை ஆக மனமணி இலிங்க மாக
நேயமே நெய்யும் பாலா நிறையநீர் அமைய ஆட்டிப்
பூசனை ஈசனார்க்குப் போற்றவிக் காட்டினோமே. 16

வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்
தாழ்த்த சென்னியும் தந்த தலைவனைச்
சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே
வீழ்த்தவா வினையேன் நெடுங்காலமே. 17

விறகில் தீயினன் பாலில் படுநெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
உறவு கோல்நட்டு உணர்வு கயிற்றினால்
முறுக வாங்கிக் கடையமுன் நிற்குமே. 18

கூற்றாயினவாறு விலக்ககலீர் கொடுமைபல
செய்தன நானறியேன்
ஏற்றாய் அடிக்கே இரவும் பகலும் பிரியாது
வணங்குவன் எப்பொழுதும்

தோற்றாது என் வயிற்றின் அகம்படியே
குடரோடு துடக்கி முடக்கியிட
ஆற்றேன் அடியேன் அதிகைக் கெடில
வீரட்டானத்துறை அம்மானே. 19

ஓசை ஒலியெலாம் ஆனாய் நீயே
உலகுக்கு ஒருவனாய் நின்றாய் நீயே
வாச மலரெலாம் ஆனாய் நீயே
மலையான் மருகனாய் நின்றாய் நீயே
பேசப் பெரிதும் இனியாய் நீயே
பிரானாய் அடிஎன்மேல் வைத்தாய் நீயே
தேச விளக்கெலாம் ஆனாய் நீயே
திருவையாறு அகலாத செம்பொற் சோதீ. 20

எல்லா உலகமும் ஆனாய் நீயே
ஏகம்பம் மேவி இருந்தாய் நீயே
நல்லாரை நன்மை அறிவாய் நீயே
ஞானச் சுடர் விளக்காய் நின்றாய் நீயே
பொல்லா வினைகள் அறுப்பாய் நீயே
புகழ்ச்சேவடி என்மேல் வைத்தாய் நீயே
செவ்வாய செல்வம் தருவாய் நீயே
திருவையாறு அகலாத செம்பொற் சோதீ. 21

எனக்கென்றும் இனியானை எம்மான் தன்னை
எழிலாரும் ஏகம்பம் மேயான் தன்னை
மனக்கென்றும் வருவானை வஞ்சர் நெஞ்சில்
நில்லானை நின்றியூர் மேயான் தன்னை
தனக்கொன்றும் அடியேனை ஆளாக் கொண்ட
சங்கரனைச் சங்கவார் குழையான் தன்னை
புனக்கொன்றைத் தாரணிந்த புனிதன் தன்னைப்
பொய்யிலியைப் பூந்துருத்திக் கண்டேன் நானே. 22

அல்லும் பகலுமாய் நின்றார் தாமே
அந்தியும் சந்தியும் ஆனார் தாமே
சொல்லும் பொருள் எலாம் ஆனார் தாமே
தோத்திரமும் சாத்திரமும் ஆனார் தாமே

பல்லுரைக்கும் பாவெலாம் ஆனார் தாமே
பழனை பதியா உடையார் தாமே
செல்லும் நெறிகாட்ட வல்லார் தாமே
திருவாலங்காடு உறையும் செல்வர் தாமே. 23

மாதா பிதாவாகி மக்களாகி
மறிகடலும் மால்விசும்பும் தானே யாகிக்
கோதாவிரியாய்க் குமரியாகிக்
கொல்புலித் தோலாடைக் குழகனாகிப்
போதாய மலர்கொண்டு போற்றி நின்று
புனைவார் பிறப்பறுக்கும் புனித னாகி
யாதானும் என நினைந்தார்க்கு எளிதே ஆகி
அழல்வண்ண வண்ணர்தாம் நின்ற வாறே. 24

நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்
நரகத்தில் இடர்ப்படோம் நடலை இல்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோம் அல்லோம்
இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை
தாமார்க்கும் குடி அல்லாத் தன்மையான
சங்கரன் நற்சங்க வெண்குழை ஓர் காதிற்
கோமாற்கே நாமென்றும் மீளா ஆளாய்க்
கொய்ம்மலர்ச் சேவடியிணையே குறுகினோமே. 25

சடைஉடையான் சங்கக்குழை ஓர் காதன்
சாம்பலும் பாம்பும் அணிந்த மேனி
விடைஉடையான் வேங்கைஅதள் மேல்ஆடை
வெள்ளி போல் புள்ளி உழை மான்தோல் சார்ந்த
உடைஉடையான் நம்மை உடையான் கண்டீர்
உம்மோடு மற்றும் உளராய் நின்ற
படை உடையான் பணிகேட்கும் பணியோம் அல்லோம்
பாசம் அற வீசும் படியோம் நாமே. 26

*திருச்சிற்றம்பலம்*



# 4. திருஞானசம்பந்தர் அருளிய தேவாரம்

## அ) நமச்சிவாயத் திருப்பதிகம்

திருச்சிற்றம்பலம்

காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி
ஓதுவார்தமை நன்னெறிக்கு உய்ப்பது
வேதம் நான்கினும் மெய்ப்பொருளாவது
நாதன் நாமம் நமச்சிவாயவே. 1

நம்பு வார்நமர் நாவில் நவிற்றினால்
வம்பு நாண்மலர் வார்மது வொப்பது
செம்பொ னார்தில கம்உல குக்கெலாம்
நம்பன் நாமம் நமச்சிவாயவே. 2

நெக்குள் ஆர்வம் மிகப்பெரு கிந்நினைந்து
அக்கு மாலைகொட ங்கையில் எண்ணுவார்
தக்க வானவ ராய்த்தகு விப்பது
நக்கன் நாமம் நமச்சிவாயவே. 3

இயமன் தூதரும் அஞ்சுவர் இன்சொல்லா
நயம் வந்து ஓதவல் லார்தமை நண்ணினால்
நியமந் தான்நினை வார்க்கினி யான்நெற்றி
நயனன் நாமம் நமச்சிவாயவே. 4

கொல்வா ரேனும் குணம்பல நன்மைகள்
இல்லா ரேனும் இயம்புவ ராயிடின்
எல்லாத் தீங்கையும் நீங்குவ ரென்பரால்
நல்லார் நாமம் நமச்சிவாயவே. 5

மந்த ரம்மன பாவங்கள் மேவிய
பந்தனையவர் தாமும் பகர்வரேல்
சிந்தும் வல்வினை செல்வமும் மல்குமால்
நந்தி நாமம் நமச்சிவாயவே. 6

நரகம் ஏழ்புக நாடினராயினும்
உரைசெய் வாயினர் ஆயின் உருத்திரர்
விரவி யேபுகு வித்திடும் என்பரால்
வரதன் நாமம் நமச்சிவாயவே. 7

இலங்கை மன்னன் எடுத்த அடுக்கன் மேல்
தலங்கொள் கால்விரல் சங்கரன் ஊன்றலும்
மலங்கி வாய்மொழி செய்தவன் உய்வகை
நலங்கொள் நாமம் நமச்சிவாயவே. 8

போதன் போதன கண்ணனும் அண்ணல்தன்
பாதந் தான்முடி நேடிய பண்பராய்
யாதுங் காண்பரி தாகி அலந்தவர்
ஓதும் நாமம் நமச்சிவாயவே. 9

கஞ்சி மண்டையர் கையிலுண் கையர்கள்
வெஞ்சொல் மிண்டர் விரவிலர் என்பரால்
விஞ்சை அண்டர்கள் வேண்ட அமுதுசெய்
நஞ்சுண் கண்டன் நமச்சிவாயவே. 10

நந்தி நாமம் நமச்சிவாயவெனும்
சந்தை யால்தமிழ் ஞானசம் பந்தன்சொல்
சிந்தை யால்மகிழ்ந்து ஏத்தவல் லாரெலாம்
பந்தபாசம் அறுக்கவல் லார்களே. 11

திருச்சிற்றம்பலம்



## ஆ) பஞ்சாக்கரத் திருப்பதிகம்

திருச்சிற்றம்பலம்

துஞ்சலும் துஞ்சல் இலாத போழ்தினும்
நெஞ்சகம் நைந்து நினைமின் நாள்தொறும்
வஞ்சகம் அற்று அடிவாழ்த்த வந்த கூற்று
அஞ்சவு தைத்தன அஞ்செழுத்துமே. 1

மந்திரம் நான்மறை யாகி வானவர்
சிந்தையுள் நின்றவர் தம்மை யாள்வன
செந்தழல் ஓம்பிய செம்மை வேதியர்க்கு
அந்தியுள் மந்திரம் அஞ்செழுத்துமே. 2

ஊனில் உயிர்ப்பை ஒடுக்கி ஒண்சுடர்
ஞான விளக்கினை ஏற்றி நன்புலத்து

ஏனை வழிதிறந்து ஏத்து வார்க்கிடர்
ஆன கெடுப்பன அஞ்செழுத்துமே. 3

நல்லவர் தீயர் எனாது நச்சினர்
செல்லல் கெடச்சிவ முத்தி காட்டுவ
கொல்ல நமன்றமர் கொண்டு போமிடத்து
அல்லல் கெடுப்பன அஞ்செழுத்துமே. 4

கொங்குலர் வன்மதன் வாளி ஐந்தகத்து
அங்குள பூதமும் அஞ்சு ஐம்பொழில்
தங்கர வின்படம் அஞ்சுந் தம்முடை
அங்கையில் ஐவிரல் அஞ்செழுத்துமே. 5

தும்மல் இருமல் தொடர்ந்த போழ்தினும்
வெம்மை நரகம் விளைந்த போழ்தினும்
இம்மை வினையடர்த்து எய்தும் போழ்தினும்
அம்மையி னுந்துணை அஞ்செழுத்துமே. 6

வீடு பிறப்பை அறுத்து மெச்சினர்
பீடை கெடுப்பன பின்னை நாள்தொறும்
மாடு கொடுப்பன மன்னு மா நடம்
ஆடி உகப்பன அஞ்செழுத்துமே. 7

வண்டமர் ஓதி மடந்தை பேணின
பண்டை இராவணன் பாடி உய்ந்தன
தொண்டர்கள் கொண்டு துதித்த பின்னவர்க்கு
அண்டம் அளிப்பன அஞ்செழுத்துமே. 8

கார்வணன் நான்முகன் காணுதற் கொணாச்
சீர்வணச் சேவடி செவ்வி நாள்தொறும்
பேர்வணம் பேசிப் பிதற்றும் பித்தர்கட்கு
ஆர்வணம் ஆவன அஞ்செழுத்துமே. 9

புத்தர் சமண்கழுக் கையர் பொய்கொளாச்
சித்தத் தவர்கள் தெளிந்து தேறின
வித்தக நீறணி வார்வி னைப்பகைக்கு
அத்திரம் ஆவன அஞ்செழுத்துமே. 10

நற்றமிழ் ஞான சம்பந்தன் நான்மறை
கற்றவன் காழியர் மன்னன் உன்னிய
அற்றமில் மாலையீ ரைந்தும் அஞ்செழுத்து
உற்றன வல்லவர் உம்பர் ஆவரே. 11

திருச்சிற்றம்பலம்



## இ) திருவாலவாய்த் திருநீற்றுப் பதிகம்

திருச்சிற்றம்பலம்

மந்திரம் ஆவது நீறு வானவர் மேலது நீறு
சுந்தரம் ஆவது நீறு துதிக்கப் படுவது நீறு
தந்திரம் ஆவது நீறு சமயத்தி லுள்ளது நீறு
செந்துவர்வாய் உமைபங்கன் திரு ஆலவாயான் திருநீறே. 1

வேதத்தில் உள்ளது நீறு வெந்துயர் தீர்ப்பது நீறு
போதந் தருவது நீறு புன்மை தவிர்ப்பது நீறு
ஓதத் தகுவது நீறு உண்மையில் உள்ளது நீறு
சீதப்புனல் வயல்சூழ்ந்த திரு ஆலவாயான் திருநீறே. 2

முத்தி தருவது நீறு முனிவர் அணிவது நீறு
சத்தியம் ஆவது நீறு தக்கோர் புகழ்வது நீறு
பத்தி தருவது நீறு பரவ இனியது நீறு
சித்தி தருவது நீறு திரு ஆலவாயான் திருநீறே. 3

காண இனியது நீறு கவினைத் தருவது நீறு
பேணி அணிபவர்க்கெல்லாம் பெருமை கொடுப்பது நீறு
மாணந் தகைவது நீறு மதியைத் தருவது நீறு
சேணந் தருவது நீறு திரு ஆலவாயான் திருநீறே. 4

பூச இனியது நீறு புண்ணியம் ஆவது நீறு
பேச இனியது நீறு பெருந்தவத்தோர்களுக்கெல்லாம்
ஆசை கெடுப்பது நீறு அந்தமது ஆவது நீறு
தேசம் புகழ்வது நீறு திரு ஆலவாயான் திருநீறே. 5

அருத்தமது ஆவது நீறு அவலம் அறுப்பது நீறு
வருத்தந் தணிப்பது நீறு வானம் அளிப்பது நீறு

பொருத்தமது ஆவது நீறு புண்ணியர் பூசும் வெண்ணீறு
திருத்தகு மாளிகை சூழ்ந்த திரு ஆலவாயான் திருநீறே. 6

எயிலது அட்டது நீறு இருமைக்கும் உள்ளது நீறு
பயிலப் படுவது நீறு பாக்கியம் ஆவது நீறு
துயிலைத் தடுப்பது நீறு சுத்தமது ஆவது நீறு
அயிலைப் பொலிதரு சூலத்து ஆலவாயான் திருநீறே. 7

இராவணன் மேலது நீறு எண்ணத் தகுவது நீறு
பராவணம் ஆவது நீறு பாவம் அறுப்பது நீறு
தராவணம் ஆவது நீறு தத்துவம் ஆவது நீறு
அராவணங் குந்திரு மேனி ஆலவாயான் திருநீறே. 8

மாலொடு அயனறி யாத வண்ணமும் உள்ளது நீறு
மேலுறை தேவர்கள் தங்கள் மெய்யது வெண்பொடி நீறு
ஏல வுடம்பிடர் தீர்க்கும் இன்பந் தருவது நீறு
ஆலமது உண்ட மிடற்றெம் ஆலவாயான் திருநீறே. 9

குண்டிகைக் கையர்களோடு சாக்கியர் கூட்டமுங் கூடக்
கண்திகைப் பிப்பது நீறு கருத இனியது நீறு
எண்டிசைப் பட்ட பொருளார் ஏத்துந் தகையது நீறு
அண்டத் தவர்பணிந்து ஏத்தும் ஆலவாயான் திருநீறே. 10

ஆற்றல் அடல்விடையேறும் ஆலவாயான் திருநீற்றைப்
போற்றிப் புகலி நிலாவும் பூசுரன் ஞானசம்பந்தன்
தேற்றித் தென்னன் உடலுற்ற தீப்பிணியாயின தீரச்
சாற்றிய பாடல்கள் பத்தும் வல்லவர் நல்லவர்தாமே. 11

*திருச்சிற்றம்பலம்*



## ஈ) திருவண்ணாமலையார் பாடல்கள்

*திருச்சிற்றம்பலம்*

பூவார்மலர்கொண்டு அடியார்
தொழுவார் புகழ்வார் வானோர்கள்
மூவார் புரங்களெரித்த அன்று
மூவர்க்கு அருள்செய்தார்

தூமாமழை நின்றதிரவெருவித்
தொறுவின் நிரையோடும்
ஆமாம்பிணை வந்தணையும்
சாரல் அண்ணாமலையாரே. 1

மஞ்சைப் போழ்ந்த மதியம் சூடும்
வானோர் பெருமானார்
நஞ்சைக் கண்டத்து அடக்குமதுவும்
நன்மைப் பொருள்போலும்
வெஞ்சொல் பேசும் வேடர்மடவார்
இதணம் அதுவேறி
அஞ்சொல்கிளிகள் ஆயோ
என்னும் அண்ணாமலையாரே. 2

ஞானத்திரள்ஆய் நின்றபெருமான்
நல்ல அடியார்மேல்
ஊனத்திரளை நீக்குமதுவும்
உண்மைப் பொருள்போலும்
ஏனத்திரளோடு இனமான்கரடி
இழியும் இரவின்கண்
ஆனைத்திரள் வந்தணையும்
சாரல் அண்ணாமலையாரே. 3

இழைத்த இடையாள்உமையாள் பங்கர்
இமையோர் பெருமானார்
தழைத்த சடையார் விடைஒன்று ஏறித்
தரியார் புரமெய்தார்
பிழைத்த பிடியைக் காணாது ஓடிப்
பெருங்கை மதவேழம்
அழைத்துத் திரிந்து அங்கு உறங்கும்
சாரல் அண்ணாமலையாரே. 4

உருவில்திகழும் உமையாள்பங்கர்
இமையோர் பெருமானார்
செருவிலொருகால் வளைய
ஊன்றிச் செந்தீ யெழுவித்தார்

பருவில் குறவர் புனத்தில் குவித்த
பருமா மணி முத்தம்
அருவித்திரளோடு இழியும்
சாரல் அண்ணாமலையாரே. 5

எனைத்து ஓர்ஊழி அடியார்
ஏத்த இமையோர் பெருமானார்
நினைத்துத் தொழுவார் பாவம்
தீர்க்கும் நிமலர் உறைகோயில்
கனைத்த மேதி காணாது
ஆயன் கைம்மேல் குழலூத
அனைத்தும் சென்று திரளும்
சாரல் அண்ணாமலையாரே. 6

வந்தித்திருக்கும் அடியார்தங்கள்
வருமேல் வினையோடு
பந்தித்திருந்த பாவந்தீர்க்கும்
பரமன் உறைகோயில்
முந்தியெழுந்த முழவினோசை
முதுகல் வரைகள்மேல்
அந்திப்பிறை வந்தணையும்
சாரல் அண்ணாமலையாரே. 7

மறந்தான்கருதி வலியை நினைந்து
மாறுஆய் எடுத்தான் தோள்
நிறந்தான்முரிய நெரிய ஊன்றி
நிறைய அருள்செய்தார்
திறந்தான்காட்டி அருளாய் என்று
தேவர்அவர் வேண்ட
அறந்தான்காட்டி அருளிச்
செய்தார் அண்ணாமலையாரே. 8

தேடிக்காணார் திருமால்பிரமன்
தேவர் பெருமானை
மூடியோங்கி முதுவேய் உகுத்த
முத்தம்பல கொண்டு

கூடிக்குறவர் மடவார் குவித்துக்
கொள்ள வம்மின் என்ற
ஆடிப் பாடி அளக்கும்
சாரல் அண்ணாமலையாரே. 9

தட்டையிடுக்கித் தலையைப்
பறித்துச் சமணே நின்றுண்ணும்
பிட்டர்சொல்லுக் கொள்ளவேண்டா
பேணித் தொழுமின்கள்
வட்டமுலையாள் உமையாள்
பங்கர் மன்னி உறைகோயில்
அட்டம் ஆளித்திரள் வந்து
அணையும் அண்ணாமலையாரே. 10

அல் ஆடு அரவம் இயங்கும்
சாரல் அண்ணாமலையாரை
நல்லார் பரவப்படுவான்
காழி ஞானசம்பந்தன்
சொல்லால் மலிந்த பாடல்ஆன
பத்தும்இவை கற்று
வல்லார்எல்லாம் வானோர்
வணங்க மன்னி வாழ்வாரே. 11

திருச்சிற்றம்பலம்



## உ) தேவாரம் (சில பாடல்கள்)

திருச்சிற்றம்பலம்

தோடுடைய செவியன் விடையேறி ஓர் தூவெண்மதி சூடி
காடுடைய சுடலைப்பொடி பூசி என் உள்ளம்கவர் கள்வன்
ஏடுடைய மலரான் முனை நாட்பணிந்து ஏத்த அருள்செய்த
பீடுடைய பிரமாபுரம் மேவிய எம்மான் இவன் அன்றே. 1

மண்ணில்நல் லவண்ணம் வாழலாம் வைகலும்
எண்ணில்நல் லகதிக்கும் யாதுமோர் குறைவிலைக்

கண்ணில்நல் லஃ்துறுங் கழுமல வளர்நகர்ப்
பெண்ணில்நல் லாளொடும் பெருந்தகை இருந்ததே. 2

நன்று உடையானைத் தீயதிலானை நரை வெள்ளேறு
ஒன்று உடையானை உமையொரு பாகம் உடையானைச்
சென்று அடையாத திருவுடையானைச் சிராப்பள்ளிக்
குன்று உடையானைக் கூற என்னுள்ளம் குளிரும்மே. 3

உண்ணாமுலை யுமையாளொடும் உடனாகிய வொருவன்
பெண்ணாகிய பெருமான்மலை திருமாமணி திகழ
மண்ணார்ந்தன அருவித்திரள் மழலைம்முழ வதிரும்
அண்ணாமலை தொழுவார்வினை வழவாவண்ண மறுமே. 4

நீ நாளும் நன்னெஞ்சே நினைகண்டாய் யார் அறிவார்
சா நாளும் வாழ்நாளும் சாய்க்காட்டு எம்பெருமாற்கே
பூ நாளும் தலை சுமப்ப புகழ் நாமம் செவிகேட்ப
நா நாளும் நவின்று ஏத்தப் பெறலாமே நல்வினையே. 5

அச்சம் இலர் பாவம் இலர் கேடும் இலர் அடியார்
நிச்சம் உறு நோயும் இலர் தாமும் நின்றியூரில்
நச்சம் மிடறு உடையார் நறுங்கொன்றை நயந்தாளும்
பச்சம் உடை அடிகள் திருப்பாதம் பணிவாரே. 6

மன்னானவன் உலகிற்கு ஒரு மழையானவன் பிழையில்
பொன்னானவன் முதலானவன் பொழில்சூழ் புளமங்கை
என்னானவன் இசையானவன் இளஞாயிறின் சோதி
அன்னானவன் உறையும் இடம் ஆலந்துறை அதுவே. 7

பூவும் நீரும் பலியும் சுமந்து புகலூரையே
நாலினாலே நவின்றேத்தல் ஓவார் செவித்துளைகளால்
யாவும் கேளார் அவன் பெருமையல்லால் அடியார்கள்தாம்
ஓவும் நாளும் உணர்வு ஒழிந்த நாள் என்னும்
உள்ளம் கொள்ளவே. 8

தாயும் நீயே தந்தை நீயே சங்கரனே அடியேன்
ஆயும் நின்பால் அன்புசெய்வான் ஆதரிக்கின்றது உள்ளம்
ஆயமாய காயம் தன்னுள் ஐவர் நின்று ஒன்றல் ஒட்டார்
மாயமே என்று அஞ்சுகின்றேன் வலிவலம் மேயவனே. 9

பிணியும் பிறப்பு அறுப்பான் பெருமான் பெருங்காட்டில்
துணியின் உடை தாழச் சுடர் ஏந்தி ஆடுவான்
அணியும் புனலானை அணி ஆப்பனூரானைப்
பணியும் மனமுடையார் வினை பற்று அறுப்பாரே. 10

வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல்லாம் அரன் நாமமே
சூழ்க வையகமும் துயர் தீர்கவே. 11

அவ்வினைக்கு இவ்வினை
ஆம்என்று சொல்லும் அஃதறிவீர்
உய்வினை நாடாது இருப்பதும்
உம்தமக்கு ஊனம்அன்றே
கைவினை செய்து எம்பிரான்
கழல்போற்றுதும் நாமடியோம்
செய்வினை வந்து எமைத்
தீண்டப்பெறா திருநீலகண்டம். 12

நிலனொடு வானும் நீரொடு தீயும்
வாயுவும் ஆகி ஓர் ஐந்து
புலனொடு வென்று பொய்ம்மைகள் தீர்ந்த
புண்ணியர் வெண்பொடிப் பூசி
நலனொடு தீங்கும் தான்அலது இன்றி
நன்கு எழு சிந்தையர் ஆகி
மலனொடு மாசும் இல்லவர் வாழும்
மல்கு பெருந்துறையாரே. 13

திருச்சிற்றம்பலம்



## 5. சுந்தரர் அருளிய தேவாரம் (சில பாடல்கள்)

திருச்சிற்றம்பலம்

பாடுவார் பசிதீர்ப்பாய் பரவுவார் பிணிகளைவாய்
ஓடுநன் கலனாக உண்பலிக்கு உழல்வோனே

காடுநின் இடமாகக் கடுஇருள் நடமாடும்
வேடனே குருகாவூர் வெள்ளடை நீயன்றே. 1

பித்தா பிறைசூடி பெருமானே அருளாளா
எத்தான் மறவாதே நினைக்கின்றேன் மனத்துன்னை
வைத்தாய் பெண்ணைத் தென்பால் வெண்ணை
நல்லூர் அருள்துறையுள்
அத்தா உனக்காளாய் இனி அல்லேன் எனல் ஆமே. 2

அந்தணாளன் உன் அடைக்கலம் புகுதர
அவனைக் காப்பது காரணமாக
வந்த காலன்தன் ஆருயிர் அதனை
வவ்வினாய்க்கு உன்றன் வன்மைகண்டு அடியேன்
எந்தை நீஎனை நமன்தமர் நலியின்
இவன்மற்று என்னடியான் என விலக்கும்
சிந்தையால் வந்துஉன் திருவடி அடைந்தேன்
செழும் பொழில்திருப் புன்கூர் உளானே. 3

நற்றமிழ் வல்ல ஞானசம் பந்தன்
நாவினுக்கு அரையன் நாளைப்போ வானும்
கற்ற சூதன்நற் சாக்கியன் சிலந்தி
கண்ணப் பன்கணம் புல்லன்என் றிவர்கள்
குற்றம் செய்யினும் குணம்எனக் கருதும் கொள்கை
கண்டுநின் குறைகழல் அடைந்தேன்
பொற்றிரள் மணிக் கமலங்கள் மலரும்
பொய்கை சூழ்திருப் புன்கூர் உளானே. 4

இறைகளோடு இசைந்த இன்பம்
இன்பத்தோடு இசைந்த வாழ்வு
பறைகிழித்து அனைய போர்வை
பற்றியான் நோக்கி னேற்குத்
திறைகொணர்ந்து ஈண்டித் தேவர்
செம்பொனும் மணியும் தூவி
அறைகழல் இறைஞ்சும் ஆரூர்
அப்பனே! அஞ்சி னேனே. 5

மண்ணின் மேல் மயங்கிக் கிடப்பேனை
வலிய வந்தெனை ஆண்டு கொண்டானே
கண்ணிலேன் உடம்பில் அடு நோயால்
கருத்தழிந்து உனக்கே பொறை ஆனேன்
தெண்ணிலா எறிக்கும் சடையானே
தேவனே திரு ஆவடுதுறையுள்
அண்ணலே எனை அஞ்சல் என்றருளாய்
ஆர்எனக்கு உறவு அமரர்கள் ஏறே. 6

குறைவிலா நிறைவே குணக்குன்றே
கூத்தனே குழைக் காதுடையானே
உறவிலேன் உனைஅன்றி மற்று அடியேன்
ஒருபிழை பொறுத்தால் இழிவுண்டே
சிறைவண்டார் பொழில்சூழ் திருவாரூர்ச்
செம்பொனே திருவாவடு துறையுள்
அறவனே என்னை அஞ்சல் என்றருளாய்
ஆர் எனக்குஉறவு அமரர்கள் ஏறே. 7

வான நாடனே வழித்துணை மருந்தே
மாசி லாமணி யேமறைப் பொருளே
ஏன மாஎயிறு ஆமையும் எலும்பும்
ஈடு தாங்கிய மார்புடை யானே
தேனெய் பால்தயிர் ஆட்டுகந் தானே
தேவனே திருவாவடு துறையுள்
ஆனையே என்னை அஞ்சல் என்றருளாய்
ஆர் எனக்குஉறவு அமரர்கள் ஏறே. 8

பொன்னும் மெய்ப்பொருளும் தருவானைப்
போகமும் திருவும் புணர்ப்பானைப்
பின்னைஎன் பிழையைப் பொறுப்பானைப்
பிழையெலாம் தவிரப் பணிப்பானை
இன்ன தன்மையன் என்றறிய வொண்ணா
எம்மானை எளிவந்த பிரானை
அன்னம் வைகும் வயற்பழனத்து அணி
ஆரூரனை மறக்கலும் ஆமே. 9

தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்
திருநீல கண்டத்துக் குயவனார்க்கு அடியேன்
இல்லையே என்னாத இயற்பகைக்கும் அடியேன்
இளையான்தன் குடிமாறன் அடியார்க்கும் அடியேன்
வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருளுக்கு அடியேன்
விரிபொழில்சூழ் குன்றையார் விறன்மிண்டற்கு அடியேன்
அல்லிமென் முல்லையந்தார் அமர்நீதிக்கு அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக்கு ஆளே. 10

திருச்சிற்றம்பலம்



## 6. திருமூலர் அருளிய திருமந்திரம்
### (சில பாடல்கள்)

திருச்சிற்றம்பலம்

ஒன்றவன் தானே இரண்டவன் இன்னருள்
நின்றனன் மூன்றினுள் நான்கு உணர்ந்தான் ஐந்து
வென்றனன் ஆறு விரிந்தனன் ஏழுஉம்பர்ச்
சென்றனன் தான்இருந்தான் உணர்ந்து எட்டே. 1

சிவனொடு ஒக்குந்தெய்வம் தேடினும் இல்லை
அவனொடு ஒப்பார்இங்கு யாவரும் இல்லை
புவனம் கடந்தன்று பொன்னொளி மின்னும்
தவனச் சடைமுடித் தாமரை யானே! 2

நான்பெற்ற இன்பம் பெறுகஇவ் வையகம்
வான்பற்றி நின்ற மறைப்பொருள் சொல்லிடின்
ஊன்பற்றி நின்ற உணர்வுஉறு மந்திரம்
தான்பற்றப் பற்றத் தலைப்படும் தானே. 3

மாணிக்கத் துள்ளே மரகதச் சோதியாய்
மாணிக்கத் துள்ளே மரகத மாடமாய்
ஆணிப்பொன் மன்றினுள் ஆடும் திருக்கூத்தைப்
பேணித் தொழுதென்ன பேறு பெற்றாரே. 4

மேலும் முகடு இல்லை கீழும் வடிம்பு இல்லை
காலும் இரண்டு முகட்டு அலகு ஒன்றுஉண்டு

ஓலையால் மேய்ந்தவாய் ஊடு வரியாமை
வேலையான் மேய்ந்ததோர் வெள்ளித் தளியே. 5

யாவர்க்கும் ஆம் இறைவர்க்கு ஒரு பச்சிலை
யாவர்க்கும் ஆம் பசுவுக்கு ஒரு வாயுறை
யாவர்க்கும் ஆம் உண்ணும்போது ஒரு கைப்பிடி
யாவர்க்கும் ஆம் பிறர்க்கு இன்னுரை தானே. 6

அன்பும் சிவமும் இரண்டென்பார் அறிவிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே. 7

ஆற்றரு நோய்மிக்கு அவனி மழையின்றிப்
போற்றரு மன்னரும் போர்வலி குன்றுவர்
கூற்றுதைத் தான்திருக் கோயில்கள் எல்லாம்
சாற்றிய பூசைகள் தப்பிடில் தானே. 8

உடம்பினை முன்னம் இழுக்குஎன்று இருந்தேன்
உடம்பினுக்கு உள்ளே உறுபொருள் கண்டேன்
உடம்புளே உத்தமன் கோயில்கொண் டான்என்று
உடம்பினை யான்இருந்து ஓம்புகின் றேனே. 9

பார்இல்லை நீர்இல்லை பங்கயம் ஒன்றுஉண்டு
தார்இல்லை வேர்இல்லை தாமரை பூத்தது
ஊர்இல்லை காணும் ஒளியது ஒன்றுஉண்டு
கீழ்இல்லை மேல்இல்லை கேள்வியிற் பூவே. 10

நாடும் நகரமும் நற்றிருக் கோயிலும்
தேடித் திரிந்து சிவபெரு மானென்று
பாடுமின் பாடிப் பணிமின் பணிந்தபின்
கூடிய நெஞ்சத்துக் கோயிலாய்க் கொள்வனே. 11

குருவே சிவமெனக் கூறினான் நந்தி
குருவே சிவமென் பதுகுறித் தோரார்
குருவே சிவனுமாய்க் கோனுமாய் நிற்கும்
குருவே உரையுணர் வற்றதோர் கோவே. 12

இலைதொட்டுப் பூப்பறித்து எந்தைக்கு என்றுஎண்ணி
மலர்தொட்டுக் கொண்டேன் வரும்புனல் காணேன்
தலைதொட்ட நூல்கண்டு தாழ்ந்ததுஎன் உள்ளம்
தலைதொட்டுக் கண்டேன் தவம்கண்ட வாறே. 13

கங்காளன் பூசும் கவசத் திருநீற்றை
மங்காமல் பூசி மகிழ்வீரே யாமாகில்
தங்கா வினைகளும் சாரும் சிவகதி
சிங்கார மான திருவடி சேர்வரே. 14

உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்
வள்ளல் பிரானார்க்கு வாய்கோ புரவாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்தும் காளா மணிவிளக்கே. 15

புண்ணியம் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு
அண்ணல் அதுகண்டு அருள்புரி யாநிற்கும்
எண்ணிலி பாவிகள் எம்இறை ஈசனை
நண்ணறி யாமல் நழுவுகின் றாரே. 16

உச்சியும் காலையும் மாலையும் ஈசனை
நச்சுமின் நச்சி 'நம'வென்று நாமத்தை
விச்சுமின் விச்சி விரிசுடர் மூன்றினும்
நச்சுமின் பேர்நந்தி நாயகன் ஆகுமே. 17

படமாடக் கோயில் பரமற்கு ஒன்றுஈயில்
நடமாடக் கோயில் நம்பர்க்கு அங்குஆகா
நடமாடக் கோயில் நம்பர்க்கு ஒன்றுஈயின்
படமாடக் கோயில் பரமற்கு அதுஆமே. 18

கண்காணி யில்லென்று கள்ளம் பலசெய்வார்
கண்காணி யில்லாஇட மில்லை காணுங்கால்
கண்காணி யாகக்கலந்து எங்கும் நின்றானைக்
கண்காணி கண்டார் களவு ஒழிந்தாரே. 19

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமனில்லை நாணாமே
சென்றே புகுங்கதி யில்லைநுஞ் சித்தத்து
நின்றே நிலைபெற நீர்நினைந்துய்மினே. 20

இக்காயம் நீங்கி இனியொரு காயத்தில்
புக்குப் பிறவாமல் போம்வழி நாடுமின்
எக்காலத்து இவ்வுடல் வந்துஎமக்கு ஆனதென்று
அக்காலம் முன்ன அருள்பெற லாமே. 21

காயப்பை யொன்று சரக்குப் பலஉள
மாயப்பை யொன்றுண்டு மற்றுமோர் பையுண்டு
காயப்பைக் குள்நின்ற கள்வன் புறப்பட்டான்
மாயப்பை மண்ணாய் மயங்கிய வாறே. 22

பசுக்கள் பலவண்ணம் பால்ஒரு வண்ணம்
பசுக்களை மேய்க்கின்ற ஆயன்ஒரு வண்ணம்
பசுக்களை மேய்க்கின்ற ஆயன்கோல் போடில்
பசுக்கள் தலைவனைப் பற்றி விடாவே. 23

ஈதுஎன்று அறிந்திலன் இத்தனை காலமும்
ஈதுஎன்று அறிந்தபின் ஏதும் அறிந்திலேன்
ஈதுஎன்று அறியும் அறிவை அறிந்தபின்
ஈதுஎன்று அறியும் இயல்புடை யோனே. 24

மரத்தை மறைத்தது மாமத யானை
மரத்தின் மறைந்தது மாமத யானை
பரத்தை மறைத்தது பார்முதற் பூதம்
பரத்தின் மறைந்தது பார்முதற் பூவே. 25

சிற்பரஞ் சோதி சிவானந்தக் கூத்தனைச்
சொற்பத மாம்அந்தச் சுந்தரக் கூத்தனைப்
பொற்பதிக் கூத்தனைப் பொன்தில்லைக் கூத்தனை
அற்புதக் கூத்தனை யார்அறி வாரே. 26

சிவசிவ என்கிலர் தீவினை யாளர்
சிவசிவ என்றிடத் தீவினை மாளும்
சிவசிவ என்றிடத் தேவரு மாவர்
சிவசிவ என்னச் சிவகதி தானே. 27

*திருச்சிற்றம்பலம்*



## 7. பட்டினத்தார் அருளிய பாடல்கள்

கல்லாப் பிழையும் கருதாப்
பிழையும் கசிந்துருகி
நில்லாப் பிழையும் நினையாப்
பிழையும் நின்அஞ்செழுத்தைச்
சொல்லாப் பிழையும் துதியாப்
பிழையும் தொழாப்பிழையும்
எல்லாப் பிழையும் பொறுத்தருள்
வாய்கச்சி ஏகம்பனே. 1

அத்தனை முப்பத்து முக்கோடி தேவர்க் கதிபதியை
நித்தனை யம்மை சிவகாம சுந்தரி நேசனையெங்
கத்தனைப் பொன்னம் பலத்தாடும் ஐயனைக் காணக்கண்கள்
எத்தனை கோடி யுகமோ தவஞ்செய் திருக்கின்றவே. 2

கான்சாயும் வெள்ளி மலைக்கர சேநின் கழல்நம்பினேன்
ஊன்சாயும் சென்மம் ஒழித்திடு வாய்கர வூரனுக்காய்
மான்சாயச் செங்கை மழவலஞ் சாய வனைந்தகொன்றைத்
தேன்சாய நல்ல திருமேனி சாய்த்த சிவக்கொழுந்தே. 3

வீடு நமக்குத் திருவாலங்காடு விமலர்தந்த
ஓடு நமக்குண்டு வற்றாத பாத்திரம் ஓங்குசெல்வ
நாடு நமக்குண்டு கேட்டதெல்லாம்தர நல்நெஞ்சமே
ஈடு நமக்குச் சொலவோ ஒருவரும் இங்கில்லையே. 4

மண்ணு முருகும் மரமுருகும்
மாயை யுருகும் மாலுருகும்
பெண்ணு முருகும் ஆணுமுருகும்
பேதா பேத வகையுருகும்
அண்ண லுருகும் இடத்தமர்த்த
ஆத்தா ளுருகும் அரவணையான்
எண்ணி யுருகும் குருநாதன்
என்பால் உரைத்த ஓர்மொழியே. 5



## 8. காரைக்கால் அம்மையார் அருளிய பாடல்கள்

கொங்கை திரங்கி நரம்பெழுந்து
குண்டுகண் வெண்பற் குழிவயிற்றுப்
பங்கி சிவந்திரு பற்கள் நீண்டு
பரடுயர் நீள்கணைக் காலோர்பெண்பேய்
தங்கி அலறி உலறுகாட்டில்
தாழ்சடை எட்டுத் திசையும்வீசி
அங்கங் குளிர்ந்தனல் ஆடும்எங்கள்
அப்பன் இடந்திரு வாலங்காடே. 1

பிறந்து மொழிபயின்ற பின்னெல்லாம் காதல்
சிறந்துநின் சேவடியே சேர்ந்தேன் – இறந்திகழ
மைஞ்ஞான்ற கண்டத்து வானோர் பெருமானே
எஞ்ஞான்று தீர்ப்பது இடர். 2

இடர்களையா ரேனும் எமக்கு இரங்காரேனும்
படரும் நெறிபணியா ரேனும் – சுடருருவில்
என்பறாக் கோலத்து எரியாடும் எம்மனார்க்கு
அன்பறாது என்நெஞ்சு அவர்க்கு. 3

இன்று நமக்கு எளிதே மாலுக்கும் நான்முகற்கும்
அன்றும் அளப்பரியன் ஆனானை – என்றுமோர்
மூவா மதியானை மூவேழு உலகங்கள்
ஆவானைக் காணும் அறிவு. 4

அவனே இருசுடர் தீ ஆகாசம் ஆவான்
அவனே புவி புனல் காற்று ஆவான் – அவனே
இயமான னாய் அட்ட மூர்த்தியாய் ஞான
மயனாகி நின்றானும் வந்து. 5

ஒருபால் உலகளந்த மாலவனாம் மற்றை
ஒருபால் உமையவளாம் என்றால் – இருபாலும்
நின்னுருவம் ஆக நிறந்தெரிய மாட்டோம் ஆல்
நின்னுருவோ மின்னுருவோ நேர்ந்து. 6



## 9. சேக்கிழார் அருளிய பெரிய புராணம்

உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன்
நிலவுலாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத்து ஆடுவான்
மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம். 1

ஊன டைந்த உடம்பின் பிறவியே
தான டைந்த உறுதியைச் சாருமால்
தேன டைந்த மலர்ப்பொழில் தில்லையுள்
மாந டஞ்செய் வரதர்பொற் றாள்தொழ. 2

பொன்னின் வெண்திரு நீறு புனைந்தெனப்
பன்னும் நீள்பனி மால்வரைப் பாலது
தன்னை யார்க்கும் அறிவரி யான்என்றும்
மன்னி வாழ்கயி லைத்திரு மாமலை. 3

அண்ணல் வீற்றிருக் கப்பெற்ற தாதலின்
நண்ணும் மூன்றுல குந்நான் மறைகளும்
எண்ணில் மாதவஞ் செய்யவந் தெய்திய
புண்ணி யந்திரண் டுள்ளது போல்வது. 4

ஆதியாய் நடுவும் ஆகி அளவிலா அளவும் ஆகிச்
சோதியாய் உணர்வும் ஆகித் தோன்றிய பொருளும் ஆகிப்
பேதியா ஏகம் ஆகிப் பெண்ணுமாய் ஆணும் ஆகிப்
போதியா நிற்கும் தில்லைப் பொதுநடம் போற்றி போற்றி! 5

சென்றகா லத்தின் பழுதிலாத் திறமும்
இனிஎதிர் காலத்தின் சிறப்பும்
இன்றெழுந் தருளப் பெற்றபே றிதனால்
எற்றைக்குந் திருவரு ளுடையேம்
நன்றியில் நெறியில் அழுந்திய நாடும்
நற்றமிழ் வேந்தனும் உய்ந்து
வென்றிகொள் திருநீற் றொளியினில் விளங்கும்
மேன்மையும் படைத்தனம் என்பார். 6



## 10. சேரமான் பெருமாள் நாயனார் அருளிய பொன்வண்ணத்து அந்தாதி

பொன்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம்
மேனி பொலிந்து இலங்கும்
மின்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம்
வீழ்சடை வெள்ளிக் குன்றம்
தன்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம்
மால்விடை தன்னைக் கண்ட
என்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம்
ஆகிய ஈசனுக்கே.



## 11. வள்ளலார் அருளிய பாடல்கள்

### அ) திருவண்ணாமலைப் பதிகம்

பூத்திடும் அவனும் காத்திடு பவனும்
புள்விலங் குருக்கொடு நேடி
ஏத்திடும் முடியும் கூத்திடும் அடியும்
இன்னமும் காண்கிலர் என்றும்
கோத்தடும் அடியர் மாலையின் அளவில்
குலவினை என்றும்நல் லோர்கள்
சாற்றிடும் அதுகேட் டுவந்தனன் நினது
சந்நிதி உறஎனக் கருளே. 1

உலகுயிர் தொறும்நின் றூட்டுவித் தாட்டும்
ஒருவனே உத்தம னேநின்
இலகுமுக் கண்ணும் காளகண் டமும்மெய்
இலங்குவெண் ணீற்றணி எழிலும்
திலகஒள் நுதல்உண் ணாமுலை உமையாள்
சேரிடப் பாலுங்கண் டடியேன்
கலகஐம் புலன்செய் துயரமும் மற்றைக்
கலக்கமும் நீக்குமா அருளே. 2

அருட்பெருங் கடலே ஆனந்த நறவே
அடிநடு அந்தமும் கடந்த
தெருட்பெரு மலையே திருஅணா மலையில்
திகழ்சுயஞ் சோதியே சிவனே
மருட்பெருங் கடலின் மயங்குகின் றேன்என்
மயக்கெலாம் ஒழிந்துவன் பிறவி
இருட்பெருங் கடல்விட் டேறநின் கோயிற்
கெளியனேன் வரவரம் அருளே. 3



### ஆ) நமச்சிவாயப் பதிகம்

பெற்ற தாய்தனை மகமறந் தாலும்
பிள்ளை யைப்பெறும் தாய்மறந் தாலும்
உற்ற தேகத்தை உயிர்மறந் தாலும்
உயிரை மேவிய உடல்மறந் தாலும்
கற்ற நெஞ்சகம் கலைமறந் தாலும்
கண்கள் நின்றிமைப் பதுமறந் தாலும்
நற்ற வத்தவர் உள்ளிருந் தோங்கும்
நமச்சி வாயத்தை நான்மற வேனே.



## 12. தாயுமானவர் அருளிய பாடல்கள்

### அ) திருவருள் விலாசப் பரசிவ வணக்கம்

அங்குஇங்கு எனாதபடி எங்கும் பிரகாசமாய்,
ஆனந்த பூர்த்திஆகி,
அருளொடு நிறைந்ததுஎது? தன்அருள் வெளிக்குளே
அகிலாண்ட கோடிஎல்லாம்
தங்கும் படிக்குஇச்சை வைத்து,உயிர்க்கு உயிராய்த்
தழைத்ததுஎது? மனவாக்கினில்
தட்டாமல் நின்றதுஎது? சமயகோ டிகள்எலாம்
தம்தெய்வம் எம்தெய்வம்என்று

எங்கும் தொடர்ந்துஎதிர் வழக்கிடவும் நின்றதுஎது?
எங்கணும் பெருவழக்காய்,
யாதினும் வல்லஒரு சித்துஆகி, இன்பமாய்,
என்றைக்கும் உள்ளதுஎது?மேல்
கங்குல்பகல் அறநின்ற எல்லைஉளது எது?அது
கருத்திற்கு இசைந்ததுஅதுவே;
கண்டன எலாம்மோன உருவெளியது ஆகவும்
கருதிஅஞ் சலிசெய்குவாம். 1

ஊர்அனந் தம்;பெற்ற பேர்அனந் தம்;சுற்றும்
உறவுஅனந் தம்;வினையினால்
உடல்அனந் தம்;செய்யும் வினைஅனந் தம்;கருத்
தோஅனந் தம்;பெற்றபேர்
சீர்அனந் தம்;சொர்க்க நரகமும் அனந்தம்;நல்
தெய்வமும் அனந்தம்;பேதம்
திகழ்கின்ற சமயமும் அனந்தம்;அத னால்ஞான
சித்சக்தி யால்உணர்ந்து,
கார்அனந் தம்கோடி வருஷித்தது எனஅன்பர்
கண்ணும்விண் ணும்தேக்கவே,
கருதரிய ஆனந்த மழைபொழியும் முகிலை;நம்
கடவுளைத்; துரியவடிவைப்
பேர்அனந் தம்பேசி மறைஅனந் தம்சொலும்
பெரியமௌ னத்தின்வைப்பைப்
பேசரும் அனந்தபத ஞான ஆனந்தம்ஆம்
பெரியபொரு ளைப்பணிகுவாம். 2

அத்வைத வஸ்துவைச் சொற்பிரகா சத்தனியை
அருமறைகள் முரசுஅறையவே
அறிவினுக்கு அறிவுஆகி, ஆனந்த மயம்ஆன
ஆதியை; அநாதிஏக
தத்துவ சொரூபத்தை; மதசம்ம தம்பெறாச்
சாலம்ப ரகிதம்ஆன
சாசுவத புஷ்கல நிராலம்ப ஆலம்ப
சாந்தபத வ்யோமநிலையை;

நித்தநிர் மலசகித நிஷ்ப்ரபஞ் சப்பொருளை
நிர்விஷய சுத்தம்ஆன
நிர்விகா ரத்தைத் தடஸ்தமாய் நின்றுஒளிர்
நிரஞ்சன நிராமயத்தைச்
சித்தம்அறி யாதபடி சித்தத்தில் நின்றுஇலகு
திவ்யதே ஜோமயத்தைச்
சிற்பர வெளிக்குள்வளர் தற்பரமது ஆனபர
தேவதையைஅஞ் சலிசெய்வாம். 3



## ஆ) பரிபூரணானந்தம்

வாசா கயிங்கரியம் அன்றிஒரு சாதனம்
மனோவாயு நிற்கும்வண்ணம்
வாலாயம் ஆகவும் பழகிஅறி யேன்;துறவு
மார்க்கத்தின் இச்சைபோல
நேசானு சாரியாய் விவகரிப் பேன்;அந்த
நினைவையும் மறந்தபோது
நித்திரைகொள் வேன்;தேகம் நீங்கும்என எண்ணிலோ
நெஞ்சம் துடித்து அயருவேன்;
பேசாத ஆனந்த நிஷ்டைக்கும் அறிவுஇலாப்
பேதைக்கும் வெகுதூரமே;
பேய்க்குணம் அறிந்து இந்த நாய்க்கும்ஒரு வழிபெரிய
பேரின்ப நிஷ்டை அருள்வாய்;
பாசா டவிக்குளே செல்லா தவர்க்குஅருள்
பழுத்துஒழுகு தேவதருவே!
பார்க்கும்இடம் எங்கும்ஒரு நீக்கம்அற நிறைகின்ற
பரிபூர ணானந்தமே! 1

தெரிவாக ஊர்வன நடப்பன பறப்பன
செயல்கொண்டு இருப்பனமுதல்
தேகங்கள் அத்தனையும் மோகம்கொள் பௌதிகம்
ஜென்மித்த ஆங்குஇறக்கும்;

விரிவாய பூதங்கள் ஒன்றோடுஒன் றாய்அழியும்
மேல்கொண்ட சேஷம்அதுவே;
வெறுவெளி; நிராலம்பம்; நிறைசூன்யம்; உபசாந்த
வேதவே தாந்தஞானம்;
பிரியாத பேரொளி பிறக்கின்ற அருள்;அருள்
பெற்றோர்கள் பெற்றபெருமை;
பிறவாமை; என்றைக்கும் இறவாமை யாய்வந்து
பேசாமை ஆகும்,எனவே
பரிவாய் எனக்குநீ அறிவிக்க வந்ததே
பரிபாக காலம் அலவோ?
பார்க்கும்இடம் எங்கும்ஒரு நீக்கம்அற நிறைகின்ற
பரிபூர ணானந்தமே! 2

ஆராயும் வேளையில் பிரமாதி ஆனாலும்
ஐய!ஒரு செயலும் இல்லை;
அமைதியொடு பேசாத பெருமைபெறு குணசந்த்ரர்
ஆம்என இருந்தபேரும்
நேராக ஒருகோபம் ஒருவேளை வரஅந்த
நிறைவுஒன்றும் இல்லாமலே
நெட்டுயிர்த் துத்தட்டு அழிந்துஉளறு வார்;வசன
நிர்வாகர் என்றபேரும்
பூராய மாய்ஒன்று பேசும்இடம் ஒன்றைப்
புலம்புவார்; சிவராத்திரிப்
போதுதுயி லோம்என்ற விரதியரும் அறிதுயில்
போலேஇருந்து துயில்வார்;
பாராதி தனில்உள்ள செயல்எலாம் முடிவிலே
பார்க்கில்நின் செயல்அல்லவோ?
பார்க்கும்இடம் எங்கும்ஒரு நீக்கம்அற நிறைகின்ற
பரிபூர ணானந்தமே! 3

அண்டபகி ரண்டமும் மாயா விகாரமே;
அம்மாயை இல்லாமையே
ஆம்எனவும் அறிவும்உண்டு; அப்பாலும் அறிகின்ற
அறிவினை அறிந்துபார்க்கின்,

எண்திசை விளக்கும்ஒரு தெய்வஅருள் அல்லாமல்
இல்லைஎனும் நினைவும் உண்டு;இங்கு
யான்எனது அறத்துரிய நிறைவுஆகி நிற்பதே
இன்பம்எனும் அன்பும்உண்டு;
கண்டன எலாம்அல்ல என்றுகண் டனைசெய்து
கருவிகர ணங்கள்ஓயக்,
கண்மூடி ஒருகணம் இருக்கஎன் றால்பாழ்த்த
கர்மங்கள் போர்ஆடுதே;
பண்டைஉள கர்மமே கர்த்தா எனும்பெயர்ப்
பக்ஷம்நான் இச்சிப்பனோ?
பார்க்கும்இடம் எங்கும்ஒரு நீக்கம்அற நிறைகின்ற
பரிபூர ணானந்தமே! 4

சந்ததமும் எனதுசெயல் நினதுசெயல், யான்எனும்
தன்மைநினை அன்றிஇல்லாத்
தன்மையால் வேறுஅலேன்; வேதாந்த சித்தாந்த
சமரச சுபாவம்இதுவே;
இந்தநிலை தெளியநான் நெக்குஉருகி வாடிய
இயற்கைதிரு உளம்அறியுமே;
இந்நிலையி லேசற்று இருக்கஎன் றால்மடமை
ஹிதசத்ரு ஆகவந்து
சிந்தைகுடி கொள்ளுதே; மலமாயை கர்மம்
திரும்புமோ? தொடுவழக்கமாய்
ஜென்மம்வரு மோ?எனவும் யோசிக்கு தேமனது;
சிரத்தைஎனும் வாளும்உதவிப்,
பந்தம்அற மெய்ஞ்ஞான தீரமும் தந்து,எனைப்
பாதுகாத்து அருள்செய்குவாய்;
பார்க்கும்இடம் எங்கும்ஒரு நீக்கம்அற நிறைகின்ற
பரிபூர ணானந்தமே! 5

பூதலயம் ஆகின்ற மாயைமுதல் என்பர்சிலர்;
பொறிபுலன் அடங்கும்இடமே
பொருள்என்பர் சிலர்;கரண முடிவுஎன்பர் சிலர்;குணம்
போனஇடம் என்பர்சிலபேர்;

நாதவடிவு என்பர்சிலர்; விந்துமயம் என்பர்சிலர்;
நடடநடு வேஇருந்த
நாம்என்பர் சிலர்;உருவம் ஆம்என்பர் சிலர்;கருதி
நாடில்அரு என்பர்சிலபேர்;
பேதம்அற உயிர்கெட்ட நிலையம்என் றிடுவர்சிலர்;
பேசில்அருள் என்பர்சிலபேர்;
பின்னும்முன் னும்கெட்ட சூனியமது என்பர்சிலர்;
பிறவுமே மொழிவர்; இவையால்
பாதரச மாய்மனது சஞ்சலப் படும்அலால்
பரமசுக நிஷ்டைபெறுமோ?
பார்க்கும்இடம் எங்கும்ஒரு நீக்கம்அற நிறைகின்ற
பரிபூர ணானந்தமே! 6

அந்தகா ரத்தைஓர் அகம்ஆக்கி, மின்போல்என்
அறிவைச் சுருக்கினவர்ஆர்?
அவ்வறிவு தானுமே பற்றினது பற்றாய்
அழுந்தவும் தலைமீதிலே
சொந்தமாய் எழுதப் படித்ததுஆர்? மெய்ஞ்ஞான
சுகநிஷ்டை சேராமலே,
சோற்றுத் துருத்தியைச் சதமெனவும் உண்டுஉண்டு
தூங்கவைத் தவர்ஆர்கொலோ?
தந்தைதாய் முதலான அகிலப்ர பஞ்சம்
தனைத்தந்தது எனதுஆசையோ?
தன்னையே நோவனோ! பிறரையே நோவனோ!
தற்காலம் அதைநோவனோ!
பந்தம்ஆ னதுதந்த வினையையே நோவனோ!
பரமார்த்தம் ஏதும்அறியேன்;
பார்க்கும்இடம் எங்கும்ஒரு நீக்கம்அற நிறைகின்ற
பரிபூர ணானந்தமே! 7

வாராது எலாம்ஒழிய, வருவன எலாம்எய்த,
மனதுசாட் சியதுஆகவே
மருவநிலை தந்ததும்; வேதாந்த சித்தாந்த
மரபுசம ரசம்ஆகவே

பூராய மாய்உணர ஊகம்அது தந்ததும்;
பொய்உடலை நிலைஅன்றுஎனப்
போதநெறி தந்ததும்; சாசுவத ஆனந்த
போகமே வீடுஎன்னவே
நீராள மாய்உருக உள்அன்பு தந்ததும்
நின்னதுஅருள்; இன்னும்இன்னும்
நின்னையே துணைஎன்ற என்னையே காக்கஒரு
நினைவுசற்று உண்டாகிலோ,
பாராதி அறியாத மோனமே இடைவிடாப்
பற்றாக நிற்கஅருள்வாய்;
பார்க்கும்இடம் எங்கும்ஒரு நீக்கம்அற நிறைகின்ற
பரிபூர ணானந்தமே! 8

ஆழ்ஆழி கரைஇன்றி நிற்கஇலை யோ?கொடிய
ஆலம்அமுது ஆகஇலையோ?
அக்கடலின் மீதுவட அனல்நிற்க இல்லையோ?
அந்தரத்து அகிலகோடி
தாழாமல் நிலைநிற்க இல்லையோ? மேருவும்
தனுவாக வளையஇலையோ?
சப்தமே கங்களும் வஜ்ரதரன் ஆணையில்
சஞ்சரித்திட இல்லையோ?
வாழாது வாழவே இராமன்அடி யால்சிலையும்
மடமங்கை ஆகஇலையோ?
மணிமந்த்ரம் ஆதியால் வேண்டுசித் திகள்உலக
மார்க்கத்தில் வைக்க இலையோ?
பாழான என்மனம் குவியஒரு தந்திரம்
பண்ணுவது உனக்கு அருமையோ?
பார்க்கும்இடம் எங்கும்ஒரு நீக்கம்அற நிறைகின்ற
பரிபூர ணானந்தமே! 9

ஆசைக்குஓர் அளவுஇல்லை அகிலம்எல் லாம்கட்டி
ஆளினும் கடல்மீதிலே
ஆணைசெல வேநினைவர்; அளகேசன் நிகராக
அம்பொன்மிக வைத்தபேரும்

நேசித்து ரசவாத வித்தைக்கு அலைந்திடுவர்;
நெடுநாள் இருந்தபேரும்
நிலையாக வேஇன்னும் காயகற் பம்தேடி
நெஞ்சுபுண் ஆவர்;எல்லாம்
யோசிக்கும் வேளையில் பசிதீர உண்பதும்
உறங்குவதும் ஆகமுடியும்;
உள்ளதே போதும்நான் நான்எனக் குளறியே
ஒன்றைவிட்டு ஒன்றுபற்றிப்
பாசக் கடற்குளே வீழாமல் மனதுஅற்ற
பரிசுத்த நிலையைஅருள்வாய்;
பார்க்கும்இடம் எங்கும்ஒரு நீக்கம்அற நிறைகின்ற
பரிபூர ணானந்தமே! 10



## இ) எங்கும் நிறைகின்ற பொருள்

அவன்அன்றி ஓர்அணுவும் அசையாது எனும்பெரிய
ஆப்தர்மொழி ஒன்றுகண்டால்,
அறிவுஆவது ஏது;சில அறியாமை ஏது;இவை
அறிந்தார்கள் அறியார்கள்ஆர்?
மௌனமொடு இருந்ததுஆர்? என்போல் உடம்புஎலாம்
வாயாய்ப் பிதற்றுமவர்ஆர்?
மனதுஎனவும் ஒருமாயை எங்கே இருந்துவரும்?
வன்மையொடு இரக்கம்எங்கே?
புவனம் படைப்பதுஎன்? கர்த்தவியம் எவ்விடம்?
பூதபே தங்கள்எவ்விடம்?
பொய்மெய், ஹிதம் அஹிதமே, வருநன்மை தீமையொடு
பொறைபொறா மையும்எவ்விடம்?
எவர்சிறியர்; எவர்பெரியர்; எவர்உறவர்; எவர்பகைஞர்;
யாதும்உனை அன்றிஉண்டோ?
இகபரம் இரண்டினிலும் உயிரினுக்கு உயிர்ஆகி
எங்கும்நிறை கின்றபொருளே! 1

வேதமுடன் ஆகம புராணஇதி காசமுதல்
வேறும்உள கலைகள் எல்லாம்
மிக்காக அத்வைத த்வைதமார்க் கத்தையே
விரிவாய் எடுத்துஉரைக்கும்;
ஓதரிய த்வைதமே அத்வைத ஞானத்தை
உண்டுபணும் ஞானம்ஆகும்;
ஊகம்அனு பவம்வசனம் மூன்றுக்கும் ஒவ்வும்ஈது;
உபயவா திகள்சம்மதம்
ஆதலின் எனக்குஇனிச் சரியைஆ திகள்போதும்;
யாதுஒன்று பாவிக்கநான்
அதுஆத லால்,உன்னை நான்என்று பாவிக்கின்
அத்வைத மார்க்கம்உறலாம்;
ஏதுபா வித்திடினும் அதுவாகி வந்தருள்செய்
எந்தைநீ குறையும்உண்டோ?
இகபரம் இரண்டினிலும் உயிரினுக்கு உயிர்ஆகி
எங்கும்நிறை கின்றபொருளே! 2

கண்ணார நீர்மல்கி உள்ளம்நெக்கு உருகாத
கள்ளனேன் ஆனாலுமோ
கைகுவித்து ஆடியும் பாடியும் விடாமலே
கண்பனித் தாரைகாட்டி,
அண்ணா பரஞ்சோதி அப்பா உனக்குஅடிமை
யான்எனவும் மேல்எழுந்த
அன்புஆகி நாடகம் நடித்ததோ குறைவுஇல்லை,
அகிலமும் சிறிது அறியுமேல்
தண்ணாரும் நின்னதுஅருள் அறியாதது அல்லவே,
சற்றேனும் இனிதுஇரங்கிச்
சாசுவத முக்திநிலை ஈதுஎன்று உணர்த்தியே
சகஜநிலை தந்து,வேறுஒன்று
எண்ணாமல் உள்ளபடி சுகமாய் இருக்கவே
ஏழையேற்கு அருள்செய்கண்டாய்;
இகபரம் இரண்டினிலும் உயிரினுக்கு உயிர்ஆகி
எங்கும்நிறை கின்றபொருளே! 3

நில்லாது தேகம்எனும் நினைவுண்டு, தேகம்நிலை
நின்றிடவும் மௌனியாகி
நேரே உபாயம்ஒன்று அருளினை; ஐயோ இதனை
நின்றுஅனுஷ் டிக்கஎன்றால்
கல்லாத மனமோ ஒடுங்கி உபரதிபெறக்
காணஇலை; ஆகையாலே
கைஏற்று உணும்புசிப்பு ஒவ்வாது; எந்நாளும்உன்
காட்சியில் இருந்துகொண்டு
வல்லாள ராய்இயம நியமாதி மேற்கொண்ட
மாதவர்க்கு ஏவல்செய்து
மனதின் படிக்குஎலாம் சித்திபெற லாம்; ஞானம்
வாய்க்கும்;ஒரு மனுஎனக்கு;இங்கு
இல்லாமை ஒன்றினையும் இல்லாமை ஆக்கவே
இப்போது இரங்குகண்டாய்;
இகபரம் இரண்டினிலும் உயிரினுக்கு உயிர்ஆகி
எங்கும்நிறை கின்றபொருளே! 4

உன்நிலையும் என்நிலையும் ஒருநிலை எனக்கிடந்து
உளறிடும் அவஸ்தைஆகி
உருவுதான் காட்டாத ஆணவமும் ஒளிகண்டு
ஒளிக்கின்ற இருள்என்னவே
தன்நிலைமை காட்டாது ஒருங்கஇரு வினையினால்
தாவுசுக துக்கவேலை
தட்டழிய முற்றும்இல் லாமையை அதனால்
தடித்துஅகில பேதம்ஆன
முன்னிலை ஒழிந்திட அகண்டிதா காரமாய்
மூதறிவு மேல்உதிப்ப
முன்பினொடு கீழ்மேல் நடுப்பக்கம் என்னாமல்
முற்றும்ஆ னந்தநிறைவே
என்நிலைமை யாய்நிற்க இயல்புகூர் அருள்வடிவம்
எந்நாளும் வாழிவாழி
இகபரம் இரண்டினிலும் உயிரினுக்கு உயிர்ஆகி
எங்கும்நிறை கின்றபொருளே! 5

அன்பர்பணி செய்யஎனை ஆள்ஆக்கி விட்டுவிட்டால்
இன்பநிலை தானேவந்து எய்தும் பராபரமே.



### மண்ணில் நல்லவண்ணம் வாழ

## 13. சிவபெருமான் துதி

(வாழ்வில் எல்லா நலன்களும் பெற்று, மண்ணில் நல்லவண்ணம் வாழ, இப்பாடல்களை நாள்தோறும் தவறாது பாராயணம் செய்வோம்.)

திருச்சிற்றம்பலம்

துயில் எழுகின்ற வேளையில்

மேலைவிதியே வினையின் பயனே
விரவார் புரமூன்று எரிசெய்தாய்
காலை எழுந்து தொழுவார் தங்கள்
கவலை களைவாய் கறைகண்டா
மாலை மதியே மலைமேல் மருந்தே
மறவேன் அடியேன் வயல்சூழ்ந்த
ஆலைக் கழனிப் பழனக் கச்சூர்
ஆலக் கோயில் அம்மானே.

— தேவாரம்

நீராடும் பொழுது

ஏவி இடர்க் கடல் இடைப்பட்டு இளைக்கின்றேனை
இப்பிறவி அறுத்து ஏறவாங்கி ஆங்கே
கூவி அமருலகு அனைத்தும் உருவிப் போகக்
குறியிலறு குணத்து ஆண்டு கொண்டார் போலும்
தாவி முதல் காவிரி நல் யமுனை கங்கை சரசுவதி
பொற்றாமரை புட்கரணி தெண்ணீர்க்
கோவியொரு குமரி வருதீர்த்தம் சூழ்ந்த
குடந்தைக் கீழ்க் கோட்டத்து எம் கூத்தனாரே.

— தேவாரம்

### திருநீறு அணியும் வேளையில்

கங்காளன் பூசும் கவசத் திருநீற்றை
மங்காமல் பூசி மகிழ்வீரே யாமாகில்
தங்கா வினைகளும் சாரும் சிவகதி
சிங்கார மான திருவடி சேர்வரே.

— திருமந்திரம்

### திருவுருவங்களுக்கு மாலை அணிவிக்கும்பொழுது

தெளியாய் மடநெஞ்சே செஞ்சடையான் பாதம்
தெளியாதார் தீநெறிக்கட்செல்வர் – தெளியாய
பூவார் சடை முடியான் பொன்னடிக்கே ஏத்துவான் நற்
பூவாய வாசம் புனைந்து.

— சிவபெருமான் திருவந்தாதி

### திருவிளக்கு ஏற்றும் தருணம்

இடர்கெடுத்து என்னை ஆண்டு கொண்டு என்னுள்
இருட்பிழம்பற எறிந்து எழுந்த
சுடர்மணி விளக்கின் உள்ளொளி விளங்கும்
தூய நற் சோதியுட் சோதி!
அடல் விடை பாகா! அம்பலக் கூத்தா!
அயனொடு மால் அறியாமைப்
படரொளி பரப்பிப் பரந்து நின்றாயைத்
தொண்டனேன் பணியுமாப் பணியே.

— திருவிசைப்பா

### குழந்தைகளுக்கு திருநீறு அணிவிக்கும் பொழுது

கொட்டும் சில பல சூழ நின்றார்க்கும் குப்புற்றெழுந்து
நட்டமறியும் கிரீடிக்கும் பாடும் நகும் வெருட்டும்
வட்டம் வரும் அருஞ்சாரனை செல்லும் மலர் தயங்கும்
புட்டங்கு இரும்பொழில் சூழ் மறைக்காட்டரன் பூதங்களே.

— பொன்வண்ணத்து அந்தாதி

### சமையல் செய்யும் வேளையில்

பரவியே பரவையார் பரிவுடனே பணிந்தேத்தி
விரவியபோ னகங்கறிகள் விதம்பலவா கச்சமைத்துப்
பரிகலமும் பாவாடை பகல்விளக்கும் உடனமைத்துத்
திருவமுது செய்வித்தார் திருந்தியதேன் மொழியினர்.

— பெரிய புராணம்

### உணவு உண்ணும் பொழுது

அன்னம் பாலிக்கும் தில்லைச் சிற்றம்பலம்
பொன்னம் பாலிக்கும் மேலும் இப்பூமிசை
என்னம் பாலிக்குமாறு கண்டு இன்புற
இன்னம் பாலிக்குமோ இப்பிறவியே.

— தேவாரம்

### பாலூட்டும் தருணம்

பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப்
பரிந்து நீ பாவியேனுடைய
ஊனினை உருக்கி உள்ஒளி பெருக்கி
உலப்பிலா ஆனந்தம் ஆய
தேனினைச் சொரிந்து புறம்புறந்திரிந்த
செல்வமே சிவபெருமானே
யான்உனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவது இனியே?

— திருவாசகம்

### தாலாட்டும் வேளையில்

பார் இதனை நலிந்து அமரர் பயம் எய்தச்
சயம் எய்தும் பரிசு வெம்மைப்
போர் இசையும் புரம் மூன்றும் போன்ற ஒருசிலை
வளைத்தோன் பொருந்தும் கோயில்
வார் இசை மென் முலை மடவார் மாளிகையில்
சூளிகை மேல் மகப்பாராட்டக்
கார் இசையும் விசும்பு இயங்கம் கணம் கேட்டு
மகிழ்வு எய்தும் கழுமலமே.

— தேவாரம்

### குழந்தைகளை வாழ்த்தும் பொழுதில்

பொருளும் குலனும் புகழும் திறனும்
அருளும் அறிவும் அனைத்தும் – ஒருவர்
கருதா என்பார்க்கும் கறைமிடற்றாய் தொல்லை
மருதா என்பார்க்கு வரும்.

**— திருவிடைமருதூர் மும்மணிக்கோவை**

### இரவில் துயில் கொள்ளும் முன்

மஞ்சனே மணியுமானாய் மரகதத் திரளுமானாய்
நெஞ்சுளே புகுந்துநின்று நினைதரும் நிகழ்வினானே
துஞ்சும் போதாக வந்து துணையெனக்கு ஆகி நின்று
அஞ்சல் என்று அருளல் வேண்டும் ஆவடுதுறை உளானே.

**— தேவாரம்**

### மருந்து உட்கொள்ளும் பொழுது

ஒருமருந்தாகி உள்ளாய் உம்பரோடு உலகுக்கெல்லாம்
பெருமருந்தாகி நின்றாய் பேரமுதின் சுவையாய்க்
கருமருந்தாகி உள்ளாய்ஆளும் வல்வினைகள் தீர்க்கும்
அருமருந்து ஆலவாயில் அப்பனே அருள்செயாயே.

**— தேவாரம்**

### வெளியில் புறப்படும் வேளையில்

காளமேகம் நிற்க காலனோடு அந்தகன் கருடனும்
நிளமாய் நின்றுஎய்த காமனும் பட்டன நினைவுஉறின்
நாளும் நாதன் அமர்கின்ற நாகேச்சுரம் நண்ணுவார்
கோளும் நாளும் தீயவேனும் நன்காம் குறிக்கொண்மினே.

**— தேவாரம்**

### மற்றவர்களை வாழ்த்தும் தருணம்

சிலைஅது வெஞ்சிலையாகத் திரிபுரம் மூன்று எரிசெய்த
இலைநுனை வேல் தடக்கையன் ஏந்திழையான் ஒருகூறன்
அலைபுனல் சூழ் பிரமபுரத்து அருமணியை அடிபணிந்தால்
நிலைஉடைய பெருஞ்செல்வம் நீடு உலகின் பெறலாமே.

**— தேவாரம்**



# மகாவிஷ்ணு ஸ்தோத்திரங்கள்

## 1. மகாவிஷ்ணு துதிப் பாடல்கள்

பச்சை மாமலைபோல் மேனி பவளவாய் கமலச் செங்கண்
அச்சுதா அமர ரேறே ஆயர்தம் கொழுந்தே என்னும்
இச்சுவை தவிர யான்போய் இந்திர லோகம் ஆளும்
அச்சுவை பெறினும் வேண்டேன் அரங்கமா நகரு ளானே. 1

என்னெஞ்சம் மேயான்என் சென்னியான், தானவனை
வன்னெஞ்சங் கிண்ட மணி வண்ணன் – முன்னம் சேய்
ஊழியான் ஊழிபெயர்த்தான், உலகேத்தும்
ஆழியான் அத்தி யூரான். 2

உயர்வற உயர்நலம் உடையவன் எவனவன்
மயர்வற மதிநலம் அருளினன் எவனவன்
அயர்வறும் அமரர்கள் அதிபதி எவனவன்
துயரறு சுடரடி தொழுதெழு என்மனமே! 3

புண்ணியம் செய்த நல்ல புனலொடு மலர்கள்தூவி
எண்ணுமின் எந்தை நாமம் இப்பிறப்பறுக்கும் அப்பால்
திண்ணம்நாம் அறியச் சொன்னோம் செறிபொழிலனந்தபுரத்து
அண்ணலார் கமலபாதம் அணுகுவார் அமரராவார். 4

நன்மையால் மிக்க நான் மறை யாளர்கள்
புன்மையாகக் கருத வராத லின்
அன்னையாய் அத்தனாய் என்னையாண் டிடும்
தன்மையான் சடகோபன் என் நம்பியே. 5

அருள் கொண்டாடும் அடியவர் இன்புற
அருளினான் அவ்வரு மறையின் பொருள்
அருள்கொண்டு ஆயிரம் இன்தமிழ் பாடினான்
அருள் கண்டீர் இவ்வுலகினில் மிக்கதே. 6

அத்தியூரான் புள்ளையூர்வான் அணிமணியின்
துத்திசேர் நாகத்தின் மேல்துயில்வான் – முத்தீ
மறையாவான் மாகடல் நஞ்சுண்டான் தனக்கும்
இறையாவன் எங்கள் பிரான். 7

உலகமுண்ட பெருவாயா! உலப்பின் கீர்த்தியம்மானே!
நிலவும் சுடர்சூழொளி மூர்த்தி! நெடியாய்! அடியேனாருயிரே!
திலதமுலகுக்காய் நின்ற திருவேங்கடத்து எம்பெருமானே!
குலதொல்லடியேன் உன்பாதம் கூடுமாறு கூறாயே. 8

அகலகில்லேன் இறையுமென்று
அலர்மேல்மங்கை யுறைமார்பா!
நிகரில் புகழாய்! உலகம்
மூன்றுடையாய்! என்னையாள்வானே!
நிகரிலமரர் முனிக் கணங்கள்
விரும்பும் திருவேங்கடத்தானே!
புகலொன்றில்லா அடியேன்
உன்னடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே! 9

வாரண மாயிரம் சூழவலம் செய்து
நாரணன் நம்பி நடக்கின்றான் என்றுஎதிர்
பூரண பொற்குடம் வைத்துப் புரமெங்கும்
தோரணம் நாட்டக் கனாக்கண்டேன் தோழீ! நான் 10

மத்தளம் கொட்ட வரிசங்கம் நின்றூத
முத்து உடைத்தாமம் நிரைதாழ்ந்த பந்தற்கீழ்
மைத்துனன் நம்பி மதுசூதனன் வந்துஎன்னை
கைத்தலம் பற்றக் கனாக்கண்டேன் தோழீ! நான் 11

கம்பமதயானைக் கழுத்தகத்தின் மேலிருந்து
இன்பமரும் செல்வமும் இவ்வரசும் யான்வேண்டேன்
எம்பெருமான் ஈசன் எழில் வேங்கடமலை மேல்
தம்பமாய் நிற்கும் தவமுடையெனாவேனே. 12

செடியாய வல்வினைகள் தீர்க்கும் திருமாலே!
நெடியானே! வேங்கடவா! நின்கோயில் வாசல்
அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்தியங்கும்
படியாய்க் கிடந்து உன்பவளவாய்க் காண்பேனே. 13



## 2. வள்ளலார் அருளிய இராமநாமப் பதிகம்

திருமகள்எம் பெருமாட்டி மகிழும் வண்ணச்
செழுங்கனியே கொழும்பாகே தேனே தெய்வத்
தருமகனைக் காத்தருளக் கரத்தே வென்றித்
தனுஎடுத்த ஒருமுதலே தருமப் பேறே
இருமையும்என் னுளத்தமர்ந்த ராமநாமத்(து)
என்அரசே என்அமுதே என்தா யேநின்
மருமலர்ப்பொன் அடிவழுத்தும் சிறியேன் அந்தோ
மனந்தளர்ந்தேன் அறிந்தும்அருள் வழங்கி லாயே. 1

மண்ணாளா நின்றவர்தம் வாழ்வு வேண்டேன்
மற்றவர்போல் பற்றடைந்து மாள வேண்டேன்
விண்ணாளா நின்றஒரு மேன்மை வேண்டேன்
வித்தகநின் திருவருளே வேண்டி நின்றேன்
புண்ணாளா நின்றமன முடையேன் செய்த
பொய்யனைத்தும் திருவுளத்தே பொறுப்பாய் அன்றிக்
கண்ணாளா சுடர்க்கமலக் கண்ணா என்னைக்
கைவிடில்என் செய்வேனே கடைய னேனே. 2

கல்லாய வன்மனத்தர் தம்பால் சென்றே
கண்கலக்கங் கொள்கின்றேன் கவலை வாழ்வை
எல்லாம்உள் இருந்தறிந்தாய் அன்றோ சற்றும்
இரங்கிலைஎம் பெருமானே என்னே என்னே
பொல்லாத வெவ்வினையேன் எனினும் என்னைப்
புண்ணியனே புரப்பதருட் புகழ்ச்சி அன்றோ
அல்லார்ந்த துயர்க்கடல்நின் றெடுத்தி டாயேல்
ஆற்றேன்நான் பழிநின்பால் ஆக்குவேனே. 3



## 3. பெரியாழ்வார் அருளிய திருப்பல்லாண்டு

பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு
பல கோடி நூறாயிரம்
மல்லாண்ட திண்தோள் மணிவண்ணா! உன்
சேவடி செவ்வி திருக்காப்பு.

அடியோமோடும் நின்னோடும் பிரிவின்றி
ஆயிரம் பல்லாண்டு,
வடிவாய் நின்வல மார்பினில் வாழ்கின்ற
மங்கையும் பல்லாண்டு,
வடிவார் சோதி வலத்துறையும்
சுடராழியும் பல்லாண்டு,
படைபோர் புக்கு முழங்கும் அப்பாஞ்ச
சன்னியமும் பல்லாண்டே.



## 4. பெரியாழ்வார் அருளிய திருமொழி

வண்ண மாடங்கள் சூழ் திருக்கோட்டியூர்,
கண்ணன்கேசவன் நம்பி பிறந்தினில்,
எண்ணெய் சுண்ணம் எதிரெதிர் தூவிடக்
கண்ணன் முற்றம் கலந்து அளறாயிற்றே. 1

மெய்திமிரும் நானப்பொடியோடு மஞ்சளும்,
செய்ய தடங்கண்ணுக்கு அஞ்சனமும் சிந்துரமும்,
வெய்ய கலைப்பாகி கொண்டு உவளாய் நின்றாள்,
ஐயா! அழேல் அழேல் தாலேலோ அரங்கத்
தணையானே! தாலேலோ. 2

சிறியன் என்று என்னிளஞ்சிங்கத்தை இகழேல் கண்டாய்,
சிறுமையின் வார்த்தையை மாவலியிடைச் சென்றுகேள்
சிறுமைப் பிழைகொள்ளில் நீயும் உன்தேவைக்குரியைகாண்,
நிறைமதி! நெடுமால் விரைந்து உன்னைக் கூவுகின்றான். 3

விண்ணெல்லாம் கேட்க அழுதிட்டாய்!
உன்வாயில் விரும்பியதனை நான்நோக்கி,
மண்ணெல்லாம் கண்டு என்மனத்துள்ளே யஞ்சி
மதுசூதனே யென்றிருந்தேன்,
புண்ணேது மில்லை உன்காதுமறியும்
பொறுத்து இறைப்போது இருநம்பீ!
கண்ணா! என் கார்முகிலே!
கடல்வண்ணா! காவலனே! முலையுணாயே. 4

பூணித்தொழுவினில்புக்குப் புழுதியளைந்த பொன்மேனி
காணப்பெரிதும் உகப்பன் ஆகிலும் கண்டார்பழிப்பர்,
நாணெத்தனையுமிலாதாய்! நப்பின்னை காணில் சிரிக்கும்,
மாணிக்கமே! என்மணியே! மஞ்சன மாடநீவாராய். 5

கருவுடை மேகங்கள் கண்டால் உன்னைக்
கண்டாலொக்கும் கண்கள்
உருவுடையாய்! உலகேழும் உண்டாகவந்து பிறந்தாய்!
திருவுடையாள் மணவாளா! திருவரங்கத்தே கிடந்தாய்!
மருவி மணம் கமழ்கின்ற மல்லிகைப்பூச் சூட்டவாராய். 6

வண்டுகளித் திரைக்கும் பொழில்சூழ்
வருபுனல் காவிரித் தென்னரங்கன்
பண்டவன் செய்த கிரீடையெல்லாம்
பட்டர்பிரான் விட்டுசித்தன் பாடல்
கொண்டிவை பாடிக்குணிக்கவல்லார்
கோவிந்தன் அடியார்களாகி,
எண் திசைக்கும் விளக்காகி நிற்பார்
இணையடி என்தலைமேலனவே. 7

திண்ணார் வெண்சங்குடையாய்! திருநாள்
திருவோணமின்றேழுநாள், முன்
பண்ணேர் மொழியாரைக் கூவிமுளையட்டிப்
பல்லாண்டு கூறுவித்தேன்
கண்ணாலம் செய்யக் கறியும்
கலத்தரிசியும் ஆக்கிவைத்தேன்,
கண்ணா! நீ நாளைத் தொட்டுக் கன்றின்
பின் போகேல் கோலம் செய்திங்கேயிரு. 8

வாய் ஒருபக்கம் வாங்கிவலிப்ப
வார்ந்த நீர்க்குழிக்கண்கள் மிழற்ற,
தாய் ஒருபக்கம் தந்தை ஒருபக்கம்
தாரமும் ஒருபக்கம் அலற்ற
தீ ஒருபக்கம் சேர்வதன் முன்னம்
செங்கண்மாலொடும் சிக்கெனச் சுற்ற
மாய், ஒருபக்கம் நிற்க வல்லார்க்கு
அரவதண்டத்திலும் உய்யலுமாமே. 9

கண்ணா! நான்முகனைப்படைத்தானே!
காரணா! கரியாய்! அடியேன்நான்,
உண்ணா நாள் பசியாவதொன்றில்லை
ஓவாதே நமோ நாரணாவென்று
எண்ணாநாளும் இருக்கெசுச்சாம
வேதநாண்மலர்கொண்டு உன்பாதம்
நண்ணாநாள், அவைதத்துறுமாகில்
அன்று எனக்கு அவைபட்டினி நாளே. 10

அரவத்தமளியினோடும் அழகியபாற்கடலோடும்,
அரவிந்தப் பாவையும் தானும் அகம்படி வந்துபுகுந்து,
பரவைத்திரைபலமோதப் பள்ளி கொள்கின்றபிரானை,
பரவுகின்றான் விட்டுசித்தன் பட்டினம் காவற்பொருட்டே. 11



## 5. ஆண்டாள் அருளிய நாச்சியார் திருமொழி

இம்மைக்கும் ஏழேழ் பிறவிக்கும் பற்றாவான்
நம்மை உடையவன் நாராயணன் நம்பி
செம்மையுடைய திருக்கையால் தாள்பற்றி
அம்மிமிதிக்கக் கனாக் கண்டேன் தோழீ! நான் 1

கருப்பூரம் நாறுமோ? கமலப்பூ நாறுமோ?
திருப்பவளச் செவ்வாய்தான் தித்திருக்குமோ?
மருப்பொசித்த மாதவன்தன் வாய்ச்சுவையும் நாற்றமும்,
விருப்புற்றுக் கேட்கின்றேன் சொல்லாழி வெண்சங்கே! 2

செம்மையுடைய திருவரங்கர் தாம் பணித்த,
மெய்ம்மைப் பெருவார்த்தை விட்டு சித்தர் கேட்டிருப்பர்,
தம்மை யுகப்பாரைத் தாமுகப்பரென்னும் சொல்,
நம்மிடையே பொய்யானால் சாதிப்பார் ஆர் இனியே? 3



## 6. குலசேகராழ்வார் அருளிய திருமொழி

செடியாயவல்வினைகள் தீர்க்கும் திருமாலே!
நெடியானே! வேங்கடவா! நின்கோயிலின் வாசல்

அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்தியங்கும்
படியாய்க் கிடந்து உன்பவளவாய் காண்பனே. 1

மீன்நோக்கும் நீள்வயல்சூழ் வித்துவக்கோட்டம்மா! என்
பால்நோக்காயாகிலும் உன்பற்றல்லால் பற்றிலேன்
தான்நோக்காது எத்துயரம் செய்திடினும், தார்வேந்தன்
கோல் நோக்கிவாழும் குடிபோன்றிருந்தேனே. 2

மங்கல நல்வன மாலை
மார்விலிலங்க மயில் தழைப்பீலிசூடி,
பொங்கிளவாடை அரையில்சாத்திப்
பூங்கொத்துக் காதில் புணரப்பெய்து,
கொங்கு நறுங்குழலார்களோடு
குழைந்து குழலினி தூதிவந்தாய்,
எங்களுக்கே ஒருநாள் வந்தூத
உன்குழலின்னிசை போதராரே. 3



## 7. திருமழிசையாழ்வார் அருளிய திருச்சந்த விருத்தம்

பொன்னிசூழ் அரங்கமேய பூவைவண்ண! மாய! கேள்!
என்ன தாவிளன்னும் வல்வினையுனுட் கொழுந்தெழுந்து
உன்னபாத மென்னநின்ற ஒண்கூடர்க்கொழுமலர்
மன்னவந்து பூண்டு வாட்டமின்றி எங்கும் நின்றதே.



## 8. தொண்டரடிப் பொடியாழ்வார் அருளிய திருமாலை

பெண்ணுலாம் சடையினானும்
பிரமனும் உன்னைக் காண்பான்,
எண்ணிலா வூழியூழி தவம்
செய்தார் வெள்கிநிற்ப,

விண்ணுளார் வியப்பவந்து
ஆனைக்கு அன்று அருளையீந்த
கண்ணறா! உன்னையன்னோ?
களைகணாக்கருது மாறே. 1

கடிமலர்க்கமலங்கள் மலர்ந்தன இவையோ
கதிரவன் கனை கடல் முளைத்தனன் இவனோ
துடியிடையார் சுரிகுழல் பிழிந்துதறித்
துகிலுடுத் தேறினர் சூழ்புனலரங்கா!
தொடையொத்த துளவமும் கூடையும் பொலிந்து
தோன்றிய தோள்தொண்டரடிப் பொடியென்னும்
அடியனை, அளியனென்றருளி உன்னடியார்க்கு
ஆட்படுத்தாய்! பள்ளி யெழுந்தருளாயே. 2



## 9. மதுரகவியாழ்வார் அருளிய கண்ணிநுண்சிறுத்தாம்பு

பயனன்றாகிலும் பாங்கல்லாராகிலும்,
செயல் நன்றாகத் திருத்திப் பணிகொள்வான்,
குயில் நின்றால்பொழில்சூழ் குருகூர்நம்பி!
முயல்கின்றேன் உன்தன் மொய் கழற்கன்பையே.



## 10. திருமங்கையாழ்வார் அருளிய திருமொழி

குலம்தரும் செல்வம் தந்திடும்
அடியார் படும்துயராயினவெல்லாம்,
நிலந்தரஞ்செய்யும் நீள்விசும்பருளும்
அருளொடு பெருநிலமளிக்கும்,
வலந்தரும் மற்றுந்தந்திடும்
பெற்ற தாயினும் ஆயின செய்யும்,
நலந்தருஞ்சொல்லை நான் கண்டு
கொண்டேன் நாராயணாவென்னும் நாமம். 1

தெரியேன் பாலகனாய்ப் பலதீமைகள் செய்துமிட்டேன்,
பெரியேனாயினபின் பிறர்க்கேயுழைத்து ஏழையானேன்,
கரிசேர்பூம்பொழில்சூழ் கனமாமலை வேங்கடவா!
அரியே! வந்தடைந்தேன் அடியேனை ஆட்கொண்டருளே. 2

வந்தாய் என் மனம் புகுந்தாய் மன்னிநின்றாய்!
நந்தாத கொழுஞ்சுடரே! எங்கள் நம்பீ!
சிந்தாமணியே! திருவேங்கடம் மேய
எந்தாய்! இனியான் உன்னை என்றும் விடேனே. 3

கருமுகில் போல்வது ஓர்மேனி கையன ஆழியும் சங்கும்,
பெருவிறல் வானவர்சூழ ஏழுலகும்தொழுதேத்த,
ஒருமகள் ஆயர்மடந்தை ஒருத்தி நிலமகள், மற்றைத்
திருமகளோடும் வருவான் சித்ரகூடத்துள்ளானே. 4

கிடந்த நம்பி குடந்தைமேவிக் கேழலாய் உலகை
இடந்த நம்பி, எங்கள் நம்பி எறிஞரரணழிய,
கடந்தநம்பிகடியாரிலங்கை உலகை ஈரடியால்,
நடந்த நம்பி நாமம் சொல்லில் நமோ நாராயணமே. 5

வந்தநாள் வந்து என் நெஞ்சிடம் கொண்டான்
மற்றோர் நெஞ்சறியான், அடியேனுடைச்
சிந்தையாய் வந்து தென்புலர்க்கு என்னைச்
சேர்கொடான் இது சிக்கெனப் பெற்றேன்,
கொந்துலாம் பொழில் சூழ்குடந்தைத் தலைக்
கோவினை குடமாடிய கூத்தனை,
எந்தையை எந்தை தந்தை தம்மானை
எம்பிரானை எத்தால் மறக்கேனே? 6

பேரானைக் குடந்தைப் பெருமானை, இலங்கு ஒளிசேர்
வாரார் வனமுலையாள் மலர்மங்கை நாயகனை,
ஆராவின்னமுதைத் தென்னழுந்தையில் மன்னி நின்ற,
காரார் கருமுகிலைக் கண்டுகொண்டு களித்தேனே. 7

கருமாமுகிலுருவா! கனலுருவா! புனலுருவா!
பெருமால்வரையுருவா! பிறவுருவா! நினதுருவா!

திருமாமகள் மருவும் சிறுபுலியூர்ச் சல சயனத்து,
அருமா கடலமுதே! உனது அடியே சரணாமே. 8

வாராளும் இளங்கொங்கை நெடும்பணைத் தோள்மடப்பாவை
சீராளும் வரைமார்பன் திருக்கண்ணபுரத்துறையும்,
பேராளன் ஆயிரம்பேர் ஆயிரவாயரவணைமேல்,
பேராளர் பெருமானுக்கு இழந்தேன் என் பெய்வளையே. 9

மற்றும் ஓர் தெய்வம் உளதென்று இருப்பாரோடு
உற்றிலேன் உற்றதும் உன்னடியார்க் கடிமை
மற்றெல்லாம் பேசிலும் நின் திருவெட்டெழுத்தும்
கற்று நான் கண்ணபுரத்துறையம்மானே! 10

பொன்னைமாமணியை அணியார்ந்ததோர்
மின்னை, வேங்கடத்து உச்சியில் கண்டுபோய்,
என்னை யாளுடை ஈசனை எம்பிரான்
தன்னை, யாம்சென்றுகாண்டும் தண்காவிலே. 11

ஏத்துகின்றோம் நாத்தழும்ப இராமன்திருமாமம்,
சோத்தநம்பீ! சுக்ரீவா! உம்மைத் தொழுகின்றோம்,
வார்த்தை பேசீர் எம்மை உங்கள் வானரம் கொல்லாமே,
கூத்தர்போல ஆடுகின்றோம் சூழமணி தூரமே. 12

சந்தமலர்க்குழல்தாழத் தானுகந்தோடித் தனியே
வந்து என்முலைத்தடந்தன்னை வாங்கி நின்வாயில் மடுத்து
நந்தன் பெறப்பெற்ற நம்பீ! நானுகந்துண்ணும் அமுதே!
எந்தை பெருமானே! உண்ணாய் என்னம்மம்
சேமமுண்ணாயே. 13

கண்ணன் மனத்துள்ளே நிற்கவும், கைவளைகள்
என்னோகழன்ற? இவை என்ன மாயங்கள்?
பெண்ணானோம் பெண்மையோம்நிற்க, அவன்மேய
அண்ணல்மலையும் அரங்கமும் பாடோமே. 14

அணியார் பொழில்சூழ் அரங்கநகரப்பா!
துணியேன் இனி நின்னருளல்லது எனக்கு

மணியே! மணிமாணிக்கமே! மதுசூதா!
பணியாய் எனக்கு உய்யும்வகை பரஞ்சோதீ! 15



## 11. திருமங்கையாழ்வார் அருளிய திருநெடுந்தாண்டகம்

மின்னுருவாய் முன்னுருவில் வேதம் நான்காய்
விளக்கொளியாய் முளைத்தெழுந்ததிங்கள் தானாய்,
பின்னுருவாய் முன்னுருவிற் பிணிமூப்பில்லாப்
பிறப்பிலியாய் இறப்பதற்கே எண்ணாது, எண்ணும்
பொன்னுருவாய் மணியுருவிற் பூதமைந்தாய்ப்
புனலுருவாய் அனலுருவில் திகழும் சோதி,
தன்னுருவாய் என்னுருவில் நின்ற எந்தை
தளிர்புரையும் திருவடி என்தலைமேலவே. 1

வங்கத்தால் மாமணி வந்துந்து முந்நீர்
மல்லையாய்! மதிள்கச்சியூராய்! பேராய்!
கொங்கத்தார் வளங்கொன்றை யலங்கல்மார்வன்
குலவரையன் மடப்பாவை இடப்பால் கொண்டான்
பங்கத்தாய்! பாற்கடலாய்! பாரின்மேலாய்!
பனிவரையின் உச்சியாய்! பவளவண்ணா!
எங்குற்றாய்? எம்பெருமான்! உன்னைநாடி
ஏழையேன் இங்ஙனமே உழி தருகேனே. 2

பொன்னானாய்! பொழிலேழும் காவல் பூண்ட
புகழானாய்! இகழ்வாய தொண்டனேன் நான்,
என்னானாய்! என்னானாய்! என்னலல்லால்
என்னறிவன் ஏழையேன்? உலகமேத்தும்
தென்னானாய்! வடவானாய்! குடபாலானாய்!
குணபாலமதயானாய்! இமையோர்க்கு என்றும்
முன்னானாய்! பின்னானார் வணங்கும் சோதி!
திருமூழிக் களத்தானாய்! முதலானாயே! 3

கல்லெடுத்துக் கல்மாரி காத்தாய்! என்றும்
காமருபூங்கச்சி யூரகத்தாய்! என்றும்,

வில்லிறுத்து மெல்லியல் தோள் தோய்ந்தாய்! என்றும்
வெஃகாவில் துயிலமர்ந்த வேந்தே! என்றும்,
மல்லடர்ந்து மல்லரை அன்று அட்டாய்! என்றும்
மாகீண்ட கைத்தலத்து என்மைந்தா! என்றும்
சொல்லெடுத்துத் தன்கிளியைச் சொல்லேயென்று
துணைமுலைமேல் துளிசோரச் சோர்கின்றாளே. 4

கார்வண்ணம் திருமேனி கண்ணும் வாயும்
கைத்தலமும் அடியிணையும் கமலவண்ணம்,
பார்வண்ண மடமங்கை பத்தர் பித்தர்
பனிமலர்மேற் பாவைக்குப் பாவம் செய்தேன்,
ஏர்வண்ண வென்பேதை என்சொல் கேளாள்
எம்பெருமான் திருவரங்கம் எங்கே? என்னும்,
நீர்வண்ணன் நீர்மலைக்கே போவேன் என்னும்
இதுவன்றோ! நிறையழிந்தார் நிற்குமாறே! 5

மைவண்ண நறுங்குஞ்சிக் குழல்பின்தாழ
மகரம் சேர்குழை இருபாடு இலங்கியாட,
எய்வண்ண வெஞ்சிலையே துணையா இங்கே
இருவராய் வந்தார் என்முன்னே நின்றார்,
கைவண்ணம் தாமரை வாய்கமலம் போலும்
கண்ணிணையும் அரவிந்தம் அடியும் அஃதே,
அவ்வண்ணத் தவர் நிலைமை கண்டும் தோழீ!
அவரை நாம் தேவரென்று அஞ்சினோமே. 6

செங்கால மடநாராய்! இன்றே சென்று
திருக்கண்ணபுரம் புக்கு என்செங்கண் மாலுக்கு
என்காதல் என்துணைவர்கு உரைத்தியாகில்
இதுவொப்பது எமக்கின்பமில்லை, நாளும்
பைங்கானமீதெல்லாம் உனதேயாகப்
பழனமீன் கவர்ந்துண்ணத்தருவன், தந்தால்
இங்கேவந்து இனிதிருந்து உன்பெடையும் நீயும்
இருநிலத்தில் இனிதின்பமெய்தலாமே. 7



## 12. நம்மாழ்வார் அருளிய திருவாய்மொழி

எந்தையே என்றும் எம்பெருமான் என்றும்,
சிந்தையுள் வைப்பன் சொல்லுவன் பாவியேன்,
எந்தை! எம்பெருமான்! என்று வானவர்,
சிந்தையுள் வைத்துச் சொல்லும் செல்வனையே. 1

எப்பொருளும் தானாய் மரகதக்குன்றமொக்கும்,
அப்பொழுதைத் தாமரைப்பூக் கண்பாதம் கைகமலம்,
எப்பொழுதும் நாள்திங்கள் ஆண்டு ஊழியூழிதொறும்,
அப்பொழுதைக்கப்பொழுது என்னாராவமுதமே. 2

முடியாததென் எனக்கேல் இனி? முழுவேழுலகும்
உண்டான், உகந்து வந்து
அடியேனுள் புகுந்தான் அகல்வானுமல்லன் இனி,
செடியார் நோய்களெல்லாம் துரந்து எமர்கீழ்மேலெழுபிறப்பும்,
விடியாவெந்நரகத்து என்றும் சேர்தல் மாறினரே. 3

முடிச்சோதியாய் உனது முகச்சோதி மலர்ந்ததுவோ?
அடிச்சோதிநீநின்ற தாமரையாய் அலர்ந்ததுவோ?
படிச்சோதி யாடையொடும் பல்கலனாய், நின்பைம்பொன்
கடிச்சோதி கலந்ததுவோ? திருமாலே! கட்டுரையே. 4

கைகளாலாரத் தொழுது தொழுது உன்னை,
வைகலும் மாத்திரைப்போதும் ஓர் வீடின்றி,
பைகொள் பாம்பேறி உறைபரனே! உன்னை
மெய்கொள்ளக் காண விரும்பும் என்கண்களே. 5

பூசும் சாந்து என் நெஞ்சே புனையும் கண்ணி எனதுடையே,
வாசகம் செய் மாலையே வான் பட்டாடையும் அஃதே,
தேசமான அணிகலனும் என்கைகூப்புச் செய்கையே,
ஈசன் ஞாலம் உண்டுமிழ்ந்த எந்தை ஏக மூர்த்திக்கே! 6

கையார் சக்கரத்து என்கருமாணிக்கமே! என்றென்று,
பொய்யே கைம்மைசொல்லிப் புறமே புறமே யாடி,
மெய்யே பெற்றொழிந்தேன் விதிவாய்க்கின்று காப்பாரார்?
ஐயோ! கண்ணபிரான்! அறையோ! இனிப் போனாலே. 7

ஆராவமுதே! அடியேனுடலம் நின்பாலன்பாயே,
நீராயலைந்து கரைய உருக்குகின்ற நெடுமாலே!
சீரார் செந்நெல் கவரிவீசும் செழுநீர்த் திருக்குடந்தை,
ஏரார்கோலம் திகழக் கிடந்தாய்! கண்டேன் எம்மானே! 8

என்னப்பன் எனக்காயிகுளாய் என்னைப் பெற்றவளாய்,
பொன்னப்பன் மணியப்பன் முத்தப்பன் என்னப்பனுமாய்,
மின்னப்பொன் மதிள் சூழ் திருவிண்ணகர் சேர்ந்த அப்பன்,
தன்னொப்பாரிலப்பன் தத்தனன் தனதாள் நிழலே. 9

உண்ணும் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையு மெல்லாம்
கண்ணன் எம்பெருமானென்றென்றே கண்கள் நீர்மல்கி,
மண்ணினுள் அவன்சீர் வளமிக்க அவனூர் வினவி,
திண்ணம் என் இளமான் புகுமூர் திருக்கோளூரே. 10

விண்மீதிருப்பாய்! மலைமேல்நிற்பாய்! கடற்சேர்ப்பாய்!
மண்மீதுழல்வாய்! இவற்றுளெங்கும் மறைந்துறைவாய்!
எண்மீதியன்ற புறவண்டத்தாய்! எனதாவி,
உள்மீதாடி உருக்காட்டாதே ஒளிப்பாயோ? 11

வார்த்தையறிபவர் மாயவற் காளன்றி யாவரோ?
போர்த்த பிறப்பொடு நோயொடு மூப்பொடு இறப்பிவை
பேர்த்து பெருந்துன்பம் வேரற நீக்கித் தன் தாளின் கீழ்ச்
சேர்த்துஅவன் செய்யும் சேமத்தை எண்ணித் தெளிவுற்றே. 12

ஆம் வண்ணம் இன்னதொன்றென்று அறிவதரிய அரியை
ஆம் வண்ணத்தால் குருகூர்ச்சடகோபன் அறிந்துரைத்த,
ஆம் வண்ணஒண் தமிழ்கள் இவையாயிரத்துள் இப்பத்தும்,
ஆம் வண்ணத்தாலுரைப்பார் அமைந்தார்
தமக்கென்றைக்குமே. 13

முடிசேர் சென்னியம்மா! நின்மொய்பூந் தாமத் தண்துழாய்,
கடிசேர் கண்ணிப்பெருமானே! என்றென்றேங்கி அழுதக்கால்,
படிசேர் மகரக் குழைகளும் பவளவாயும் நால்தோளும்,
துடிசேரிடையுமமைந்ததோர் தூநீர் முகில்போல் தோன்றாயே. 14

தொழுதுமாமலர் நீர்சுடர் தூபம்கொண்டு,
எழுதுமென்னும் இது மிகையாதலில்,

பழுதில் தொல் புகழ்ப் பாம்பணைப் பள்ளியாய்!
தழுவுமாறு அறியேன் உன்தாள்களே. 15

மையார் கருங்கண்ணி கமலமலர்மேல்
செய்யாள், திருமார்வினில் சேர் திருமாலே!
வெய்யார் சுடராழி சுரி சங்கமேந்தும்,
கையா! உன்னைக் காணக் கருதும் என் கண்ணே. 16

பணிமொழி நினைதொறும் ஆவிவேமால்
பகல்நிரை மேய்க்கிய போய கண்ணா!
பிணியவிழ் மல்லிகை வாடைதூவப்
பெருமதமாலையும் வந்தின்றாலோ!
மணிமிகுமார்வினில் முல்லைப்போது என்
வனமுலைக் கமழ்வித்து உன் வாயமுதம் தந்து,
அணிமிகு தாமரைக்கையை அந்தோ!
அடிச்சியோம் தலைமிசை நீ அணியாய். 17

உற்றேன் உகந்து பணி செய்து உன்பாதம்,
பெற்றேன், ஈதே இன்னம் வேண்டுவது எந்தாய்,
கற்றார் மறைவானவர்கள் வாழ் திருப்பேராற்கு,
அற்றாரடியார் தமக்கு அல்லல் நில்லாவே. 18

## 13. பொய்கையாழ்வார் அருளிய திருவந்தாதி

ஒன்றும் மறந்தறியேன் ஓத நீர்வண்ணனைநான்,
இன்ற மறப்பனோ? ஏழைகாள்! – அன்று
கருவரங்கத்துள் கிடந்து கைதொழுதேன் கண்டேன்,
திருவரங்கமேயான் திசை.

## 14. பூதத்தாழ்வார் அருளிய திருவந்தாதி

மனத்துள்ளான் வேங்கடத்தான் மாகடலான், மற்றும்
நினைப்பரிய நீளரங்கத்துள்ளான் – எனைப்பலரும்
தேவாதிதேவன் எனப்படுவான், முன்னொரு நாள்
மாவாய் பிளந்த மகன்.

## 15. பிரதிவாதிபயங்கரம் அன்னங்கராட்சார்யர் சுவாமிகள் அருளியது

செய்ய தாமரைத் தாளிணை வாழியே
சேலைவாழிதிரு நாபி வாழியே,
துய்ய மார்பும் புரிநூலும் வாழியே
சுந்தரத் திருத்தோளிணை வாழியே,
கையுமேந்திய முக்கோலும் வாழியே
கருணை பொங்கிய கண்ணிணை வாழியே,
பொய்யில்லாத மணவாளமாமுனி
புந்தி வாழி புகழ் வாழி வாழியே.

அடியார்கள் வாழ அரங்கநகர் வாழ
சடகோபன் தண்தமிழ் நூல்வாழ – கடல் சூழ்ந்த
மன்னுலகம் வாழ, மணவாள மாமுனியே!
இன்னும் ஒரு நூற்றாண்டு இரும்.

### வாழி திருநாமம்

போதமிகும் பொய்கையார் பூதத்தார் வாழியே
புகழ் பேயார் மழிசையர்கோன் புத்தூரன் வாழியே,
நாதமுனி தொழுங்குருகை நாவீரன் வாழியே
நற்பாணன் கொல்லி நகர் நாதனார் வாழியே,
ஆதரிக்குந் தொண்டரடிப் பொடிதாள்கள் வாழியே,
அருட்கலியன் மதுரகவி யாண்டாளும் வாழியே
ஏதமற்ற நாலாயிரப்பனுவல் வாழியே
இவருதித்த நாள் மாதமெழிற்பதியும் வாழியே.



*மூதறிஞர் ராஜாஜி அருளிய*

## 16. குறை ஒன்றும் இல்லை

குறை ஒன்றுமில்லை மறைமூர்த்தி கண்ணா
குறை ஒன்றுமில்லை கண்ணா

குறை ஒன்றுமில்லை கோவிந்தா
கண்ணுக்குத் தெரியாமல் நிற்கின்றாய் கண்ணா
கண்ணுக்குத் தெரியாமல் நின்றாலும் எனக்கு
குறை ஒன்றுமில்லை மறைமூர்த்தி கண்ணா
வேண்டியதைத் தந்திட வேங்கடேசன் நின்றிருக்க
வேண்டியது வேறில்லை மறைமூர்த்தி கண்ணா
மணிவண்ணா மலையப்பா கோவிந்தா கோவிந்தா

திரையின் பின் நிற்கின்றாய் கண்ணா கண்ணா
திரையின் பின் நிற்கின்றாய் கண்ணா – உன்னை
மறை ஓதும் ஞானியர் மட்டுமே காண்பார்
திரையின் பின் நிற்கின்றாய் கண்ணா – உன்னை
மறை ஓதும் ஞானியர் மட்டுமே காண்பார்
என்றாலும் குறை ஒன்றும் எனக்கில்லை கண்ணா
என்றாலும் குறை ஒன்றும் எனக்கில்லை கண்ணா
குன்றின் மேல் கல்லாகி நிற்கின்ற வரதா
குன்றின் மேல் கல்லாகி நிற்கின்ற வரதா
குறை ஒன்றும் இல்லை மறைமூர்த்தி கண்ணா
குறை ஒன்றும் இல்லை மறைமூர்த்தி கண்ணா
மணிவண்ணா மலையப்பா கோவிந்தா கோவிந்தா

கலி நாளுக்கிரங்கி கல்லிலே இறங்கி
நிலையாகக் கோயிலில் நிற்கின்றாய் கேசவா
குறை ஒன்றும் இல்லை மறைமூர்த்தி கண்ணா
யாரும் மறுக்காத மலையப்பா
யாரும் மறுக்காத மலையப்பா – உன் மார்பில்
ஏதும் தர நிற்கும் கருணைக் கடல் அன்னை
என்றும் இருந்திட ஏது குறை எனக்கு
என்றும் இருந்திட ஏது குறை எனக்கு
ஒன்றும் குறை இல்லை மறைமூர்த்தி கண்ணா
ஒன்றும் குறை இல்லை மறைமூர்த்தி கண்ணா
மணிவண்ணா மலையப்பா கோவிந்தா கோவிந்தா
கோவிந்தா கோவிந்தா கோவிந்தா கோவிந்தா.



# தேவியர் ஸ்தோத்திரங்கள்

## 1. ஜயதுர்க்கா ரோக நிவாரண அஷ்டகம்

பகவதி தேவி பர்வத தேவி
பலமிகு தேவி துர்க்கையளே
ஜெகமது யாவும் ஜெய ஜெயவெனவே
சங்கரி உன்னைப் பாடிடுமே
ஹநஹந தகதக பசபச வெனவே
தளிர்த்திடு ஜோதி யானவளே
ரோகநி வாரணி சோக நிவாரணி
தாப நிவாரணி ஜெய துர்க்கா. 1

தண்டினி தேவி தக்ஷிணி தேவி
கட்கினி தேவி துர்க்கையளே
தந்தன தான தனதன தான
தாண்டவ நடன ஈச்வரியே
முண்டினி தேவி முனையொளி சூலி
முனிவர்கள் தேவி மணித்தீவியளே
ரோகநி வாரணி சோக நிவாரணி
தாப நிவாரணி ஜெய துர்க்கா. 2

காளினி நீயே காமினி நீயே
கார்த்திகை நீயே துர்க்கையளே
நீலினி நீயே நீதினி நீயே
நீர்நிதி நீயே நீர்ஒளியே
மாலினி நீயே மாதினி நீயே
மாதவி நீயே மான்விழியே
ரோக நிவாரணி சோக நிவாரணி
தாப நிவாரணி ஜெய துர்க்கா. 3

நாரணி மாயே நான்முகன் தாயே
நாகினி யாயே துர்க்கையளே
ஊரணி மாயே ஊற்று தாயே
ஊர்த்துவ யாயே ஊர்ஒளியே

காரணி மாயே காருணி தாயே
கானக யாயே காசினியே
ரோக நிவாரணி சோக நிவாரணி
தாப நிவாரணி ஜெய துர்க்கா. 4

திருமக ளானாய் கலைமக ளானாய்
மலைமக ளானாய் துர்க்கையளே
பெருநிதி யானாய் பேரறி வானாய்
பெருவலி யானாய்ப் பெண்மையளே
நறுமல ரானாய் நல்லவ ளானாய்
நந்தினி யானாய் நங்கையளே
ரோக நிவாரணி சோக நிவாரணி
தாப நிவாரணி ஜெய துர்க்கா. 5

வேதமும் நீயே வேதியள் நீயே
வேகமும் நீயே துர்க்கையளே
நாதமும் நீயே நாற்றிசை நீயே
நாணமும் நீயே நாயகியே
மாதமும் நீயே மாதவம் நீயே
மானமும் நீயே மாயவளே
ரோக நிவாரணி சோக நிவாரணி
தாப நிவாரணி ஜெய துர்க்கா. 6

கோவுறை ஜோதி கோமள ஜோதி
கோமதி ஜோதி துர்க்கையளே
நாவுறை ஜோதி நாற்றிசை ஜோதி
நாட்டிய ஜோதி நாச்சியளே
பூவுறை ஜோதி பூரண ஜோதி
பூதநற் ஜோதி பூரணியே
ரோக நிவாரணி சோக நிவாரணி
தாப நிவாரணி ஜெய துர்க்கா. 7

ஜெய ஜெய சைல புத்திரி ப்ரஹ்ம
சாரணி சந்திர கண்டினியே
ஜெய ஜெய கூஷ்மாண்டினி ஸ்கந்த
மாதினி காத்யா யன்யயளே

ஜெய ஜெய காலராத்திரி கௌரி
சித்திதா ஸ்ரீநவ துர்க்கையளே
ரோக நிவாரணி சோக நிவாரணி
தாப நிவாரணி ஜெய துர்க்கா. 8



## துர்க்கை சித்தர் அருளிய
## 2. ராகு கால துர்க்கா அஷ்டகம்

வாழ்வு ஆனவள் துர்க்கா வாக்கு மானவள்
வானில் நின்றவள் இந்த மண்ணில் வந்தவள்
தாழ்வு அற்றவள் துர்க்கா தாயும் ஆனவள்
தாபம் நீக்கியே என்னைத் தாங்கும் துர்க்கையே
தேவி துர்க்கையே ஜெய தேவி துர்க்கையே
தேவி துர்க்கையே ஜெய தேவி துர்க்கையே 1

உலகை யீன்றவள் துர்க்கா உமையு மானவள்
உண்மை யானவள் எந்தன் உயிரைக் காப்பவள்
நிலவில் நின்றவள் துர்க்கா நித்யை யானவள்
நிலவி நின்றவள் எந்தன் நிதியும் துர்க்கையே
தேவி துர்க்கையே ஜெய தேவி துர்க்கையே
தேவி துர்க்கையே ஜெய தேவி துர்க்கையே 2

செம்மை யானவள் துர்க்கா ஜெபமு மானவள்
அம்மை யானவள் அன்புத் தந்தை யானவள்
இம்மை யானவள் துர்க்கா இன்ப மானவள்
மும்மை யானவள் என்றும் முழுமை துர்க்கையே
தேவி துர்க்கையே ஜெய தேவி துர்க்கையே
தேவி துர்க்கையே ஜெய தேவி துர்க்கையே 3

உயிரு மானவள் துர்க்கா உடலு மானவள்
உலக மானவள் எந்தன் உடமை யானவள்
பயிரு மானவள் துர்க்கா படரும் கொம்பவள்
பண்பு பொங்கிட என்னுள் பழுத்த துர்க்கையே
தேவி துர்க்கையே ஜெய தேவி துர்க்கையே
தேவி துர்க்கையே ஜெய தேவி துர்க்கையே 4

துன்ப மற்றவள் துர்க்கா தூரிய வாழ்பவள்
துறையு மானவள் இன்பத் தோணி யானவள்
அன்பு உற்றவள் துர்க்கா அபய வீடவள்
நன்மை தங்கிட என்னுள் நடக்கும் துர்க்கையே
தேவி துர்க்கையே ஜெய தேவி துர்க்கையே
தேவி துர்க்கையே ஜெய தேவி துர்க்கையே 5

குருவு மானவள் துர்க்கா குழந்தை யானவள்
குலமு மானவள் எங்கள் குடும்ப தீபமே
திருவு மானவள் துர்க்கா திரிசூலி மாயவள்
திரு நீற்றில் என்னிடம் திகழும் துர்க்கையே
தேவி துர்க்கையே ஜெய தேவி துர்க்கையே
தேவி துர்க்கையே ஜெய தேவி துர்க்கையே 6

ராகு தேவனின் பெரும் பூஜை ஏற்றவள்
ராகு நேரத்தில் என்னைத் தேடி வருபவள்
ராகு காலத்தில் எந்தன் தாயே வேண்டினேன்
ராகு துர்க்கையே என்னைக் காக்கும் துர்க்கையே
தேவி துர்க்கையே ஜெயதேவி துர்க்கையே
தேவி துர்க்கையே ஜெயதேவி துர்க்கையே 7

கன்னி துர்க்கையே இதயக் கமலதுர்க்கையே
கருணை துர்க்கையே வீரக் கனக துர்க்கையே
அன்னை துர்க்கையே என்றும் அருளும் துர்க்கையே
அன்பு துர்க்கையே ஜெயதேவி துர்க்கையே
தேவி துர்க்கையே ஜெயதேவி துர்க்கையே
தேவி துர்க்கையே ஜெயதேவி துர்க்கையே 8



### திருக்கடவூர்

## 3. அபிராமியம்மைப் பதிகம்

கலையாத கல்வியும் குறையாத வயதும் ஓர்
கபடு வாராத நட்பும்
கன்றாத வளமையும் குன்றாத இளமையும்
கழுபிணி யிலாத உடலும்

சலியாத மனமும் அன்பு அகலாத மனைவியும்
தவறாத சந்தா னமும்
தாழாத கீர்த்தியும் மாறாத வார்த்தையும்
தடைகள் வாராத கொடையும்
தொலையாத நிதியமும் கோணாத கோலும் ஒரு
துன்பமில் லாத வாழ்வும்
துய்யநின் பாதத்தில் அன்பும்உதவிப் பெரிய
தொண்டரொடு கூட்டுங்கண்டாய்
அலையாழி அறிதுயிலும் மாயனது தங்கையே!
ஆதிகட வூரின் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி! அபிராமி யே!



## 4. அபிராமி அந்தாதி
### (சில பாடல்கள்)

நல்வித்தையும் ஞானமும் கிடைக்கும்

உதிக்கின்ற செங்கதிர் உச்சித் திலக முணர்வுடையோர்
மதிக்கின்ற மாணிக்கம் மாதுளம் போது மலர்க்கமலை
துதிக்கின்ற மின்கொடி மென்கடிக் குங்குமதோயமென்ன
விதிக்கின்ற மேனி அபிராமி யென்றன் விழுத்துணையே. 1

உயர் பதவிகளை அடையலாம்

மனிதரும் தேவரும் மாயா முனிவரும் வந்துசென்னிக்
குனிதரும் சேவடிக் கோமளமே கொன்றை வார்சடைமேல்
பனிதருந் திங்களும் பாம்பும் பகீரதி யும்படைத்த
புனிதரும் நீயுமென் புந்தியெந்நாளும் பொருந்துகவே. 2

மலையென வரும் துன்பம் பனியென நீங்கும்

ததியுறு மத்திற் சுழலுமென்னாவி தளர்விலதோர்
கதியுறு வண்ணம் கருதுகண்டாய்கம லாலயனும்
மதியுறு வேணி மகிழ்நனும் மாலும் வணங்கியென்றும்
துதியுறு சேவடி யாய்சிந்துரானன சுந்தரியே. 3

### வைராக்கிய நிலை ஏற்படும்

பூத்தவ ளேபுவனம்பதி னான்கையும் பூத்தவண்ணம்
காத்தவ ளேபின்கரந்தவ ளேகறைக் கண்டனுக்கு
மூத்தவ ளேஎன்றும்மூவா முகுந்தற்கு இளையவளே
மாத்தவ ளேஉன்னையன்றி மற்றோர்தெய்வம் வந்திப்பதே. 4

### மரணத்தை வெல்லலாம்

வவ்விய பாகத்து இறைவரும் நீயும் மகிழ்ந்திருக்கும்
செவ்வியும் உங்கள் திருமணக் கோலமும் சிந்தையுள்ளே
அவ்வியம் தீர்த்தென்னை ஆண்டபொற்பாதமும் ஆகிவந்து
வெவ்விய காலன்என் மேல்வரும்போது வெளி நிற்கவே. 5

### வீடு, நிலம் முதலிய செல்வங்கள் கிடைக்கும்

உறைகின்றநின் திருக்கோயிலின் கேள்வரொருபக்கமோ
அறைகின்ற நான்மறையின் அடியோமுடி யோவமுதம்
நிறைகின்ற வெண்திங்க ளோகஞ்சமோஎன்றன் நெஞ்சகமோ
மறைகின்ற வாரிதி யோபூர ணாசல மங்கலையே. 6

### தீராத வியாதிகள் தீரும்

மணியே மணியி னொளியே யொளிரும் மணிபுனைந்த
அணியே அணியும் அணிக்கழ கேயணு காதவர்க்குப்
பிணியே பிணிக்கு மருந்தே அமரர் பெருவிருந்தே
பணியே னொருவரை நின்பத்ம பாதம் பணிந்தபின்னே. 7

### நினைத்த காரியம் இடையூறின்றி ஈடேறும்

பின்னே திரிந்துன் னடியாரைப் பேணிப் பிறப்பறுக்க
முன்னே தவங்கள் முயன்றுகொண் டேன்முதன் மூவருக்கும்
அன்னே உலகுக்கு அபிராமி என்னும் அருமருந்தே
என்னே இனியுன்னை யான்மற வாமல்நின் றேத்துவனே. 8

### மனநோய் தீரும்

உடைத்தனை வஞ்சப்பிறவியை உள்ளம் உருகும் அன்பு
படைத்தனை பத்மபதயுகம் சூடும் பணி எனக்கே
அடைத்தனை நெஞ்சத்தழுக்கை எல்லாம் நின் அருட்புனலால்
துடைத்தனை ஸுந்தரி நின்அருள் ஏதென்று சொல்லுவதே. 9

### அகால மரணமும் துர்மரணமும் ஏற்படாதிருக்கும்

ஆசைக் கடலில் அகப்பட்டு அருளற்ற அந்தகன்கைப்
பாசத்தில் அல்லல்பட இருந்தேனை நின்பாதம் என்னும்
வாசக்கமலம் தலைமேல் வலியவைத்து ஆண்டுகொண்ட
நேசத்தை என் சொல்லுவேன் ஈசர்பாகத்து நேரிழையே. 10

### பயிர் வளரும் செல்வம் செழிக்கும்

வந்தே சரணம் புகும்அடி யாருக்கு வானுலகம்
தந்தே பரிவோடு தான்போய் இருக்கும் சதுர்முகமும்
பைந்தேன் அலங்கல் பருமணி ஆகமும் பாகமும்பொன்
செந்தேன் மலரும் அலர்கதிர் ஞாயிறும் திங்களுமே. 11

### தீமை, பகையெல்லாம் ஒழியும்

பரிபுரச் சீறடிப் பாசாங் குசைபஞ்ச பாணியின்சொல்
திரிபுர சுந்தரி சிந்தூர மேனியள் தீமைநெஞ்சில்
புரிபுர வஞ்சரை அஞ்சக் குனிபொருப் புச்சிலைக்கை
எரிபுரை மேனி இறைவர்செம் பாகத் திருந்தவளே. 12

### அம்பிகையை நேரில் காணலாம்

நாயகி நான்முகி நாராயணிகை நளினபஞ்ச
சாயகி சாம்பவி சங்கரி சாமளை சாதிநச்சு
வாயகி மாலினி வாராகி சூலினி மாதங்கிஎன்று
ஆயகியாதி உடையாள் சரணம் அரண்நமக்கே. 13

### வறுமை ஒழியும்

ஐயன் அளந்த படிஇரு நாழிகொண்டு அண்டம்எல்லாம்
உய்ய அறம்செயும் உன்னையும் போற்றி ஒருவர் தம்பால்
செய்ய பசுந்தமிழ்ப் பாமாலை யும்கொண்டு சென்றுபொய்யும்
மெய்யும் இயம்பவைத்தாய் இதுவோ உன்றன் மெய்யருளே. 14

### மாயையை வெல்லலாம்

நாயேனையும் இங்குஒரு பொருளாக நயந்துவந்து
நீயே நினைவின்றி ஆண்டு கொண்டாய்நின்னை உள்ளவண்ணம்
பேயேன் அறியும் அறிவுதந்தாய் என்னபேறு பெற்றேன்
தாயே மலைமகளே செங்கண் மால்திருத் தங்கைச்சியே. 15

### கல்வி சிறக்கும்

வல்லபம் ஒன்றறியேன் சிறியேன் நின் மலரடிச்செம்
பல்லவம் அல்லது பற்றொன்றி லேன்பசும் பொற்பொருப்பு
வில்லவர் தம்முடன் வீற்றிருப் பாய்வினையேன் தொடுத்த
சொல்அவ மாயினும் நின்திரு நாமங்கள் தோத்திரமே. 16

### பகைவர்கள் அழிவர்

தோத்திரம் செய்து தொழுதுமின் போலும்நின் தோற்றம்ஒரு
மாத்திரைப் போதும் மனத்தில் வையாதவர் வண்மைகுலம்
கோத்திரம் கல்வி குணங்குன்றி நாளும் குடில்கள்தொறும்
பாத்திரம் கொண்டு பலிக்குழ லாநிற்பர் பாரெங்குமே. 17

### நிலம், வீடு, தோட்டம் போன்ற செல்வங்கள் பெருகும்

பாரும் புனலும் கனலும்வெங் காலும் படர்விசும்பும்
ஊரும் முருகு சுவையொளி ஊறொலி யொன்றுபடச்
சேருந் தலைவி சிவகாம சுந்தரி சீரடிக்கே
சாருந் தவமுடையார் படையாத தனம் இல்லையே. 18

### சகல சௌபாக்கியங்களும் உண்டாகும்

தனம்தரும் கல்விதரும் ஒருநாளும் தளர்வறியா
மனம்தரும் தெய்வவடிவும் தரும்நெஞ்சில் வஞ்சமில்லா
இனம்தரும் நல்லனவெல்லாம் தரும்அன்ப ரென்பவர்க்கே
கனம்தரும் பூங்குழலாள்அபி ராமிகடைக் கண்களே. 19

### மனக்குறை தீர்ந்து மகிழ்ச்சி பெருகும்

அழகுக்கு ஒருவரும் ஒவ்வாத வல்லி யருமறைகள்
பழகிச் சிவந்த பதாம்புயத் தாள்பனி மாமதியின்
குழவித் திருமுடிக் கோமள யாமளைக் கொம்பிருக்க
இழவுற்று நின்றநெஞ்சே இரங்கேல் உனக்கென் குறையே. 20

### தொழிலில் மேன்மை அடையலாம்

நயனங்கள் மூன்றுடை நாதனும் வேதமும் நாரணனும்
அயனும் பரவும் அபிராம வல்லி அடிஇணையைப்
பயன்என்று கொண்டவர் பாவையர் ஆடவும் பாடவும்பொன்
சயனம் பொருந்து தமனியக் காவினில் தங்குவரே. 21

### விதியையும் வெல்லலாம்

தங்குவர் கற்பகத் தாருவின் நீழலில் தாயர்இன்றி
மங்குவர் மண்ணில் வழுவாப் பிறவியை மால்வரையும்
பொங்குவர் ஆழியும் ஈரேழ் புவனமும் பூத்தஉந்திக்
கொங்கிவர் பூங்குழ லாள்திரு மேனி குறித்தவரே. 22

### பகை அச்சம் நீங்கும்

பயிரவி பஞ்சமி பாசாங்குசை பஞ்சபாணி வஞ்சர்
உயிரவி உண்ணும் உயர்சண்டி காளி ஒளிருங்கலா
வயிரவி மண்டலி மாலினி சூலி வராகியென்றே
செயிரவி நான்மறை சேர்திரு நாமங்கள் செப்புவரே. 23

### நிலையான மனமகிழ்ச்சி பெறலாம்

கூட்டிய வாவென்னைத் தன்னடி யாரிற் கொடியவினை
ஓட்டிய வாவென்கண் ஓடிய வாதன்னை உள்ளவண்ணம்
காட்டிய வாகண்ட கண்ணும் மனமும் களிக்கின்றவா
ஆட்டிய வாநட மாடகத் தாமரை யாரணங்கே. 24

### எப்பொழுதும் அம்பிகையின் அருள் கிடைக்கும்

பரம்என்று உனையடைந்தேன் தமியேனும் உன்பத்தருக்குள்
தரம்அன்று இவன் என்று தள்ளத்தகாது தரியலர்தம்
புரம்அன்று எரியப் பொருப்புவில் வாங்கிய போதில்அயன்
சிரம்ஒன்று செற்றகை யான்இடப் பாகம் சிறந்தவளே. 25

### அரசாங்க காரியங்களில் வெற்றி உண்டாகும்

மெல்லிய நுண்ணிடை மின்னனை யாளை விரிசடையோன்
புல்லிய மென்முலைப் பொன்னனை யாளைப் புகழ்ந்துமறை
சொல்லிய வண்ணம் தொழுமடி யாரைத் தொழுமவர்க்குப்
பல்லிய மார்த்தெழ வெண்பக டூரும் பதந்தருமே. 26

### மனம் உறுதி பெறும்

நன்றே வருகினும் தீதே விளைகினும் நான்அறிவது
ஒன்றேயும் இல்லை உனக்கே பரம்எனக்கு உள்ளஎல்லாம்
அன்றே உனதுஎன்று அளித்துவிட் டேன்அழி யாதகுணக்
குன்றே அருட்கடலே இமவான் பெற்ற கோமளமே. 27

### புகழும் தர்மமும் வளரும்

ஆதித்தன் அம்புலி அங்கி குபேரன் அமரர்தங்கோன்
போதிற் பிரமன் புராரி முராரி பொதியமுனி
காதிப் பொருபடைக் கந்தன் கணபதி காமன்முதல்
சாதித்த புண்ணியர் எண்ணிலர் போற்றுவர் தையலையே. 28

### அம்பிகையை மனத்தில் காணல்

குழையைத் தழுவிய கொன்றையற் தார்கமழ் கொங்கைவல்லி
கழையைப் பொருத் திருநெடுந்தோளும் கரும்புவில்லும்
விழையப் பொருதிறல் வேரியம் பாணமும் வெண்நகையும்
உழையைப் பொருகண்ணும் நெஞ்சில்எப் போதும்
உதிக்கின்றனவே. 29

### நூற்பயன்

ஆத்தாளை எங்கள்அபி ராமவல்லியை அண்டமெல்லாம்
பூத்தாளை மாதுளம்பூ நிறத்தாளைப் புவிஅடங்கக்
காத்தாளை அங்கையில் பாசாங்குசமும் கரும்புவில்லும்
சேர்த்தாளை முக்கண்ணியைத் தொழுவார்க்கொரு
தீங்கில்லையே. 30



## 5. லலிதா நவரத்தின மாலை

ஞான கணேசா சரணம் சரணம்
ஞான ஸ்கந்தா சரணம் சரணம்
ஞான ஸத்குரு சரணம் சரணம்
ஞானானந்தா சரணம் சரணம்!

### காப்பு

ஆக்கும் தொழில்ஐந் தரனாற் றநலம்
பூக்கும் நகையாள் புவனேச் வரிபால்
சேர்க்கும் நவரத் தினமா லையினைக்
காக்கும் கணநா யகவா ரணமே!

### வைரம்

கற்றும் தெளியார் காடேகதியாய்
கண்மூடி நெடுங் கனவான தவம்
பெற்றும் தெரியார் நினையென் னில்அவம்
பெருகும் பிழையேன் பேசத் தகுமோ
பற்றும் வயிரப் படைவாள் வயிரப்
பகைவர்க் கெமனாக எடுத்தவளே
வற்றாத அருட்சுனையே வருவாய்
மாதா ஜயஓம் லலிதாம் பிகையே!

### நீலம்

மூலக் கனலே சரணம் சரணம்
முடியா முதலே சரணம் சரணம்
கோலக் கிளியே சரணம் சரணம்
குன்றாத ஒளிக் குவையே சரணம்
நீலத் திருமே னியிலே நினைவாய்
நினைவற் றெளியேன் நின்றேன் அருள்வாய்
வாலைக் குமரி வருவாய் வருவாய்
மாதா ஜயஓம் லலிதாம் பிகையே!

### முத்து

முத்தே வரும்முத் தொழிலாற் றிடவே
முன்நின் றருளும் முதல்வீ சரணம்
வித்தே விளைவே சரணம் சரணம்
வேதாந் தநிவா ஸினியே சரணம்
தத்தே றியநான் தனயன் தாய்நீ
சாகா தவரம் தரவே வருவாய்
மத்தே றுத்திக் கிணைவாழ் வுடையேன்
மாதா ஜயஓம் லலிதாம் பிகையே!

### பவளம்

அந்தி மயங்கிய வானவி தானம்
அன்னை நடனம் செயும் ஆனந்தமேடை

சிந்தை நிறம் பவளம் மொழிபாரோர்
தேம்பொழி லாமிது செய்தவ ளாரோ
எந்தை இடத்தும் மனத்தும் இருப்பாள்
எண்ணு பவர்க்கருள் எண்ணமி குத்தாள்
மந்திர வேதமயப் பொரு ளானாள்
மாதா ஜயஓம் லலிதாம் பிகையே!

### *மாணிக்கம்*

காணக் கிடையாக் கதியா னவளே
கருதக் கிடையாக் கலையா னவளே
பூணக் கிடையாப் பொலிவா னவளே
புனையக் கிடையாப் புதுமைத் தவளே
நாணித் திருநா மமும்நின் துதியும்
நவிலா தவரை நாடா தவளே
மாணிக் கஒளிக் கதிரே வருவாய்
மாதா ஜயஓம் லலிதாம் பிகையே!

### *மரகதம்*

மரகத வடிவே சரணம் சரணம்
மதுரித பதமே சரணம் சரணம்
ஸுரபதி பணியத் திகழ்வாய் சரணம்
ச்ருதிஜதி லயமே இசையே சரணம்
அரஹர சிவஎன் றடியவர் குழும
அவரருள் பெற அருளமுதே சரணம்
வரநவ நிதியே சரணம் சரணம்
மாதா ஜயஓம் லலிதாம் பிகையே!

### கோமேதகம்

பூமே வியநான் புரியும் செயல்கள்
பொன்றாப் பயனும் குன்றா வரமும்
தீமேல் இடினும் ஜயசக் திஎனத்
திடமாய் அடியேன் மொழியும் திறமும்

கோமே தகமே குளிர்வான் நிலவே
குழல்வாய் மொழியே வருவாய் தருவாய்
மாமேருவிலே வளர்கோ கிலமே
மாதா ஜயஓம் லலிதாம் பிகையே!

### பத்மராகம்

ரஞ்சனி நந்தினி அங்கணி பதும
ராகவி காஸவி யாமினி அம்பா
சஞ்சல ரோகநி வாரணி வாணி
சாம்பவி சந்த்ரக லாதரி ராணி
அஞ்சன மேனி அலங்க்ருத பூரணி
அம்ருத ஸ்வரூபிணி நித்ய கல்யாணி
மஞ்சுள மேரு ச்ருங்க நிவாஸினி
மாதா ஜயஓம் லலிதாம் பிகையே!

### வைடூர்யம்

வலையொத் தவினை கலையொத்த மனம்
மருளப் பறையா றொலியொத் தவிதால்
நிலையற் றெளியேன் முடியத் தகுமோ
நிகளம் துகளாக வரம் தருவாய்
அலையற் றசைவற் றநுபூ திபெறும்
அடியார் முடிவாழ் வைடூரியமே
மலையத் துவசன் மகளே வருவாய்
மாதா ஜயஓம் லலிதாம் பிகையே!

### பயன்

எவர் எத்தினமும் இசைவாய்
லலிதா நவரத்தினமாலை நவின்றிடுவார்
அவர் அற்புத சக்தி எல்லாம் அடைவர்
சிவரத்தினமாய்த் திகழ்வார் அவரே.



# 6. தாயுமானவர் அருளிய பாடல்கள்

## அ) மலைவளர்காதலி

பதிஉண்டு, நிதிஉண்டு, புத்திரர்கள், மித்திரர்கள்,
பக்கம்உண்டு, எக்காலமும்
பவிசுஉண்டு, தவிசுஉண்டு, திருஷ்டாந்தம் ஆகயம
படர்எனும் திமிரம்அணுகாக்
கதிஉண்டு, ஞானம்ஆம் கதிர்உண்டு, சதிர்உண்டு,
காயசித் திகளும்உண்டு,
கறைஉண்ட கண்டர்பால் அம்மைநின் தாளில்
கருத்துஒன்றும் உண்டாகுமேல்;
நதிஉண்ட கடல்எனச் சமயத்தை உண்டபர
ஞானஆ னந்தஒளியே!
நாதாந்த ரூபமே! வேதாந்த மோனமே!
நான்எனும் அகந்தைதீர்த்துஎன்
மதிஉண்ட மதிஆன மதிவதன வல்லியே!
மதுசூ தனன்தங்கையே!
வரைரா ஜனுக்கு இருகண் மணியாய் உதித்தமலை
வளர்காத லிப்பெண் உமையே! 1

தெட்டிலே, வலியமட மாதர்வாய் வெட்டிலே,
சிற்றிடையி லே,நடையிலே,
சேல்ஒத்த விழியிலே, பால்ஒத்த மொழியிலே,
சிறுபிறை நுதல்கீற்றிலே,
பொட்டிலே, அவர்கட்டு பட்டிலே, புனைகந்த
பொடியிலே, அடியிலே,மேல்
பூரித்த முலையிலே, நிற்கின்ற நிலையிலே
புந்திதனை நுழையவிட்டு
நெட்டிலே அலையாமல்; அறிவிலே, பொறையிலே,
நின்அடியர் கூட்டத்திலே,
நிலைபெற்ற அன்பிலே, மலைவுஅற்ற மெய்ஞ்ஞான
ஞேயத்தி லே,உன்இருதாள்

மட்டிலே மனதுசெல நினதுஅருளும் அருள்வையோ?
வளம்மருவு தேவைஅரசே!
வரைரா ஜனுக்குஇருகண் மணியாய் உதித்தமலை
வளர்காத லிப்பெண் உமையே! 2

பூதமுதல் ஆகவே நாதபரி யந்தமும்
பொய்என்று எனைக்காட்டி,என்
போதத்தின் நடுவாகி, அடிஈறும் இல்லாத
போதபூ ரணவெளிக்குள்
ஏதும்அற நில்என்று உபாயமா வைத்துநினைவு
எல்லாம்செய் வல்லசித்தாம்
இன்பஉரு வைத்தந்த அன்னையே! நின்னையே
எளியேன் மறந்துஉய்வனோ?
வேதமுதல் ஆனநல் ஆகமத் தன்மையை
விளக்கும்உள் கண் இலார்க்கும்,
மிக்கநின் மகிமையைக் கேளாத செவிடர்க்கும்,
வீறுவா தம்புகலும்வாய்
வாதநோ யாளர்க்கும் எட்டாத முக்கணுடை
மாமருந்துக்கு அமிர்தமேஸ
வரைரா ஜனுக்குஇருகண் மணியாய் உதித்த மலை
வளர்காத லிப்பெண் உமையே! 3

மிடிஇட்ட வாழ்க்கையால் உப்புஇட்ட கலம்எனவும்
மெய்எலாம் உள்உடைந்து,
வீறுஇட்ட செல்வர்தம் தலைவாயில் வாசமாய்
வேதனைகள் உறவேதனும்
துடிஇட்ட வெவ்வினையை ஏவினான்; பாவிநான்
தொடர்இட்ட தொழில்கள்எல்லாம்
துண்டுஇட்ட சாண்கும்பி யின்பொருட் டாயதுஉன்
தொண்டர்பணி செய்வதுஎன்றோ?
அடிஇட்ட செந்தமிழின் அருமைஇட்டு ஆரூரில்
அரிவைஓர் பரவைவாயில்

அம்மட்டும் அடிஇட்டு நடைநடந் தருள்அடிகள்
அடிஈது முடிஈது என
வடிஇட்ட மறைபேசு பச்சிளங் கிள்ளையே!
வளம்மருவு தேவைஅரசே!
வரைரா ஜனுக்குஇருகண் மணியாய் உதித்தமலை
வளர்காத லிப்பெண்உமையே! 4

பூரணி, புராதனி, சுமங்கலை, சுதந்தரி,
புராந்தகி, த்ரியம்பகி, எழில்
புங்கவி, விளங்குசிவ சங்கரி, சகஸ்ரதள
புட்பமிசை வீற்றிருக்கும்
நாரணி, மனாதீத நாயகி, குணாதீத
நாதாந்த சக்திஎன்றுஉன்
நாமமே உச்சரித் திடும்அடியர் நாமமே
நான்உச்ச ரிக்கவசமோ?
வார்அணி சடைக்கடவுள் ஆரணி எனப்புகழ
அகிலாண்ட கோடிஈன்ற
அன்னையே! பின்னையும் கன்னிஎன மறைபேசும்
ஆனந்த ரூபமயிலே!
வார்அணியும் இருகொங்கை மாதர்மகிழ் கங்கைபுகழ்
வளம்மருவு தேவைஅரசே!
வரைரா ஜனுக்குஇருகண் மணியாய் உதித்தமலை
வளர்காத லிப்பெண் உமையே! 5

பாகமோ பெறஉனைப் பாடஅறி யேன்;மல
பரிபாகம் வரவும்மனதில்
பண்புமோ சற்றும்இலை; நியமமோ செய்திடப்
பாவியேன் பாபரூப
தேகமோ திடம்இல்லை; ஞானமோ கனவிலும்
சிந்தியேன்; பேரின்பமோ
சேரஎன் றால்கள்ள மனதுமோ மெத்தவும்
சிந்திக்குது, என்செய்குவேன்?

மோகமோ, மதமோ, குரோதமோ, லோபமோ,
முற்றுமாற் சரியமோதான்
முறியிட்டு எனைக்கொள்ளும்; நிதியமோதேடஎனில்
மூசுவரி வண்டுபோல
மாகம்ஓ டவும்வல்லன்; எனைஆள வல்லையோ?
வளம்மருவு தேவைஅரசே!
வரைரா ஜனுக்குஇருகண் மணியாய் உதித்தமலை
வளர்காத லிப்பெண் உமையே! 6

தூள்ஏறு தூசுபோல் வினைஏறு மெய்எனும்
தொக்கினுள் சிக்கி,நாளும்
சுழல்ஏறு காற்றினிடை அழல்ஏறு பஞ்சுஎனச்
சூறையிட்டு அறிவைஎல்லாம்,
நாள்ஏற நாள்ஏற வார்த்திகம் எனும்கூற்றின்
நட்புஏற உள்உடைந்து,
நயனங்கள் அற்றதுஓர் ஊர்ஏறு போலவே
நானிலம் தனில்அலையவோ?
வேள்ஏறு தந்தியைக் கனதந்தி யுடன்வென்று,
விரைஏறு மாலைடி,
விண்ஏறு மேகங்கள் வெற்புஏறி மறைவுஉற
வெருட்டிய கருங்கூந்தலாய்!
வாள்ஏறு கண்ணியே! விடைஏறும் எம்பிரான்
மனதுக்கு இசைந்தமயிலே!
வரைரா ஜனுக்குஇருகண் மணியாய் உதித்தமலை
வளர்காத லிப்பெண் உமையே! 7

பூதமொடு பழகிவளர் இந்திரியம் ஆம்பேய்கள்,
புந்திமுதல் ஆனபேய்கள்,
போராடு கோபாதி ராட்சசப் பேய்கள்என்
போதத்தை ஊடுஅழித்து,
வேதனை வளர்த்திடச் சதுர்வேத வஞ்சன்
விதித்தான்;இவ் அல்லல்எல்லாம்

வீழும் படிக்குஉனது மௌனமந்த் ராதிக்ய
வித்தையை வியந்து அருள்வையோ?
நாதவடிவு ஆகிய மகாமந்திர ரூபியே!
நாதாந்த வெட்டவெளியே!
நற்சமயம் ஆனபயிர் தழையவரும் மேகமே!
ஞானஆ னந்தமயிலே!
வாதமிடு பரசமயம் யாவுக்கும் உணர்வுஅரிய
மகிமைபெறு பெரியபொருளே!
வரைரா ஜனுக்குஇருகண் மணியாய் உதித்தமலை
வளர்காத லிப்பெண் உமையே! 8



## ஆ) அகிலாண்டநாயகி

வட்டம் இட்டுஒளிர்பி ராண வாயுஎனும்
நிகள மோடுகம னம்செயும்
மனம்எ னும்பெரிய மத்த யானையைஎன்
வசம்அ டக்கிடின்,மும் மண்டலத்து
இஷ்டம் உற்றவள ராஜ யோகம்இவன்
யோகம் என்றுஅறிஞர் புகழவே
ஏழை யேன்உலகில் நீடு வாழ்வன்,இனி
இங்குஇ தற்கும்அனு மானமோ?
பட்ட வர்த்தனர் பராவு சக்ரதர
பாக்யம் ஆனசுப யோகமும்,
பார காவிய கவித்வம் நான்மறை
பராய ணம்செய்மதி யூகமும்,
அஷ்ட சித்தியும்நல் அன்ப ருக்குஅருள
விருது கட்டியபொன் அன்னமே!
அண்ட கோடிபுகழ் காவை வாழும்அகி
லாண்ட நாயகிஎன் அம்மையே!



## இ) பெரியநாயகி

காற்றைப் பிடித்துமண் கரகத்து அடைத்தபடி,
கன்மப் புனற்குள்ஊறும்
கடைகெட்ட நவவாயில் பெற்றபசு மண்கலக்
காயத்துள் எனைஇருத்திச்,

சோற்றைச் சுமத்தி,நீ பந்தித்து வைக்கத்,
துருத்திக்குள் மதுஎன்னவே
துள்ளித் துடித்துஎன்ன பேறுபெற் றேன்?அருள்
தோயம்நீ பாய்ச்சல்செய்து,

நாற்றைப் பதித்ததுஎன ஞானம்ஆம் பயிரதனை
நாட்டிப், புலப்பட்டியும்
நமன்ஆன தீப்பூடும் அணுகாமல் முன்நின்று.
நாடுசிவ போகம்ஆன

பேற்றைப் பகுத்துஅருளி எனைஆள வல்லையோ?
பெரியஅகி லாண்டகோடி
பெற்றநா யகிபெரிய கபிலைமா நகர்மருவு
பெரியநா யகிஅம்மையே!



# 7. வள்ளலார் அருளிய பாடல்கள்

## அ) அம்மை திருப்பதிகம்

பொய்யாத மொழியும்மயல் செய்யாத செயலும்வீண்
போகாத நாளும் விடயம்
புரியாத மனமும்உட் பிரியாத சாந்தமும்
புந்திதள ராத நிலையும்

எய்யாத வாழ்வும்வே றெண்ணாத நிலையும்நினை
என்றும் மறவாத நெறியும்
இறவாத தகவும்மேற் பிறவாத கதியும்இவ்
வேழையேற் கருள்செய் கண்டாய்

கொய்யாது குவியாது குமையாது மணம்வீசு
கோமளத் தெய்வ மலரே
கோவாத முத்தமே குறையாத மதியமே
கோடாத மணி விளக்கே
ஐயான னம்கொண்ட தில்லையம் பதிமருவும்
அண்ணலார் மகிழும் மணியே
அகிலாண்ட மும்சரா சரமும்ஈன் றருள்பர
சிவானந்த வல்லி உமையே. 1

நீறணிந்து ஒளிர் அக்க மணி தரித்து உயர்
சைவ நெறி நின்று உனக்குரிய வோர்
நிமலமுறும் ஐந்தெழுத்துள் நிலையுறக் கொண்டு
நின்னடிப் பூசை செய்து
வீறணிந்து என்றும் ஒரு தன்மை பெறும் சிவ
ஞான வித்தகர் பதம் பரவும் ஓர்
மெய்ச்செல்வ வாழ்க்கையின் விருப்பமுடையேன்
இது விரைந்தருள வேண்டும் அமுதே
பேறணிந்து அயன் மாலும் இந்திரனும் அறி
வறிய பெருமையை அணிந்த அமுதே
பிரச மலர் மகள் கலைசொல் மகள் விசய மகள்
முதல் பெண்கள் சிரமேவு மணியே
ஆறிணிந்திடு சடையர் தில்லை யம்பதி மருவும்
அண்ணலார் மகிழு மணியே
அகிலாண்ட மும்சரா சரமும்ஈன் றருள்பர
சிவானந்த வல்லி உமையே. 2

மாயைஎனும் இரவில்என் மனையகத் தேவிடய
வாதனை எனுங்கள் வர்தாம்
வந்துமன அடிமையை எழுப்பிஅவ னைத்தமது
வசமாக உளவு கண்டு
மேயமதி எனும்ஒரு விளக்கினை அவித்தெனது
மெய்ந்நிலைச் சாளிகைஎலாம்

வேறுற உடைத்துள்ள பொருள்எலாம் கொள்ளைகொள
மிகநடுக் குற்று நினையே
நேயம்உற ஓவாது கூவுகின் றேன்சற்றும்
நின்செவிக் கேற இலையோ
நீதிஇலை யோதரும நெறியும் இலை யோஅருளின்
நிறைவும்இலை யோஎன் செய்கேன்
ஆயமறை முடிநின்ற தில்லையம் பதிமருவும்
அண்ணலார் மகிழும் மணியே
அகிலாண்ட மும்சரா சரமும்ஈன் றருள்பர
சிவானந்த வல்லி உமையே. 3



## ஆ) பெரியநாயகியார் ஸ்தோத்திரம்

தன்னேர் அறியாப் பரவெளியில்
சத்தாம் சுத்த அநுபவத்தைச்
சார்ந்து நின்ற பெரியவர்க்கும்
தாயே எமக்குத் தனித்தாயே
மின்னே மின்னேர் இடைப்பிடியே
விளங்கும் இதய மலர்அனமே
வேதம் புகலும் பசுங்கிளியே
விமலக் குயிலே இளமயிலே
பொன்னே எல்லாம் வல்லதிரி
புரையே பரையே பூரணமே
புனித மான புண்ணியமே
பொற்பே கற்ப கப்பூவே
அன்னே முன்னே என்னேயத்
தமர்ந்த அதிகை அருட்சிவையே
அரிய பெரிய நாயகிப்பெண்
ணரசே என்னை ஆண்டருளே.



## இ) சிவகாமவல்லி துதி

தனத்தால் இயன்ற தனிச்சபையில்
நடிக்கும் பெருமான் தனக்கன்றே
இனத்தால் உயர்ந்த மணமாலை
இட்டுக் களித்த துரைப்பெண்ணே
மனத்தான் விளங்கும் சிவகாம
வல்லிக் கனியே மாலொடும்ஓர்
அனத்தான் புகழும் அம்மேஇவ்
வடியேன் உனக்கே அடைக்கலமே.



## ஈ) கண்ணமங்கைத் தாயார் துதி

உலகம் புரக்கும் பெருமான்தன்
உளத்தும் புயத்தும் அமர்ந்தருளி
உவகை அளிக்கும் பேரின்ப
உருவே எல்லாம் உடையாளே

திலகம் செறிவாள் நுதற்கரும்பே
தேனே கனிந்த செழுங்கனியே
தெவிட்டா தன்பர் உளத்துள்ளே
தித்தித் தெழும்ஓர் தெள்ளமுதே

மலகஞ் சுகத்தேற் கருளளித்த
வாழ்வே என்கண் மணியேஎன்
வருத்தம் தவிர்க்க வரும்குருவாம்
வடிவே ஞான மணிவிளக்கே

சலகந் தரம்போற் கருணைபொழி
தடங்கண் திருவே கணமங்கைத்
தாயே சரணம் சரணம்இது
தருணம் கருணை புரிவாயே.



## உ) சரஸ்வதி வாழ்த்து

சங்கம்வளர்ந் திடவளர்ந்த தமிழ்க்கொடியைச்
சரச்சுவதி தன்னை அன்பர்
துங்கமுறக் கலைபயிற்றி உணர்வளிக்கும்
கலைஞானத் தோகை தன்னைத்
திங்கள்நுதல் திருவைஅருட் குருவைமலர்
ஓங்கியபெண் தெய்வம் தன்னைத்
தங்கமலை முலையாளை கலையாளைத்
தொழுதுபுகழ் சாற்று கிற்பாம்.



## 8. காமாட்சி துக்க நிவாரண அஷ்டகம்

மங்கள ரூபிணி மதியணி
சூலினி மன்மத பாணியளே
சங்கடம் நீக்கிடச் சடுதியில்
வந்திடும் சங்கரி சௌந்தரியே
கங்கண பாணியன் கனிமுகம்
கண்டநல் கற்பகக் காமினியே
ஜெய ஜெய சங்கரி கௌரி
கிருபாகரி துக்க நிவாரணி காமாட்சி 1

கானுறு மலரெனக் கதிர்ஒளிக்
காட்டிக் காத்திட வந்திடுவாள்
தானுறு தவஒளி தாரொளி
மதியொளி தாங்கியே வீசிடுவாள்
மானுறு விழியாள் மாதவர்
மொழியாள் மாலைகள் சூடிடுவாள்
ஜெய ஜெய சங்கரி கௌரி
கிருபாகரி துக்க நிவாரணி காமாட்சி 2

சங்கரி சௌந்தரி சதுர்முகன்
போற்றிடச் சபையினில் வந்தவளே
பொங்கு அரிமாவினில் பொன்னடி
வைத்துப் பொருந்திட வந்தவளே

எம்குலம் தழைத்திட எழில்
வடிவுடனே எழுந்தநல் துர்க்கையளே
ஜெய ஜெய சங்கரி கௌரி
கிருபாகரி துக்க நிவாரணி காமாட்சி 3

தண தண தந்தண தவிலொலி
முழங்கிடத் தண்மணி நீ வருவாய்
கண கண கங்கண கதிர்ஒளி
வீசிடக் கண்மணி நீ வருவாய்
பண பண பம்பண பறைஒலி
கூவிடப் பண்மணி நீ வருவாய்
ஜெய ஜெய சங்கரி கௌரி
கிருபாகரி துக்க நிவாரணி காமாட்சி 4

பஞ்சமி பைரவி பர்வத
புத்திரி பஞ்சநல் பாணியளே
கொஞ்சிடும் குமரனைக் குணம்மிகு
வேழனைக் கொடுத்தநல் குமரியளே
சங்கடம் தீர்த்திடச் சமர்அது
செய்தநல் சக்தியெனும் மாயே
ஜெய ஜெய சங்கரி கௌரி
கிருபாகரி துக்க நிவாரணி காமாட்சி 5

எண்ணியபடி நீ யருளிட
வருவாய் எம்குல தேவியளே
பண்ணிய செயலின் பலனது
நலமாய்ப் பல்கிட அருளிடுவாய்
கண்ணொளி யதனால் கருணையே
காட்டிக் கவலைகள் தீர்ப்பவளே
ஜெயஜெய சங்கரி கௌரி
கிருபாகரி துக்க நிவாரணி காமாட்சி 6

இடர்தரு தொல்லை இனிமேல்
இல்லையென்று நீ சொல்லிடுவாய்
சுடர்தரு அமுதே சுருதிகள்
கூறிச் சுகமது தந்திடுவாய்

படர்தரு இருளில் பரிதியாய்
வந்துப் பழவினை ஓட்டிடுவாய்
ஜெய ஜெய சங்கரி கௌரி
கிருபாகரி துக்க நிவாரணி காமாட்சி 7

ஜெய ஜெய பாலா சாமுண்டேஸ்வரி ஜெய ஜெய ஸ்ரீதேவி
ஜெய ஜெய துர்க்கா ஸ்ரீபரமேஸ்வரி ஜெய ஜெய ஸ்ரீதேவி
ஜெய ஜெய ஜெயந்தி மங்கள காளி ஜெய ஜெய ஸ்ரீதேவி
ஜெய ஜெய சங்கரி கௌரி கிருபாகரி துக்க
நிவாரணி காமாட்சி 8



## 9. காமாட்சி அம்மன் துதி

பத்துவிரல் மோதிரம் எத்தனை பிரகாசமது
பாடகத் தண்டை கொலுசும்
பச்சை வைடூரிய மிச்சையாய் இழைத்திட்ட
பாதச் சிலம்பி னொலியும்
முத்து மூக்குத்தியும் ரத்தினப் பதக்கமும்
மோகன மாலை யழகும்
முழுதும் வைடூரியம் புஷ்பராகத்தினால்
முடிந்திட்ட தாலி யழகும்
சுத்தமா யிருக்கின்ற காதினிற் கம்மலுஞ்
செங்கையில் பொன் கங்கணமும்
ஜெகமெலாம் விலைபெற்ற முகமெலா மொளியுற்ற
சிறுகாது கொப்பி னழகும்
அத்திவரதன் தங்கை சக்தி சிவரூபத்தை
அடியனாற் சொல்லத் திறமோ
அழகான காஞ்சியில் புகழாக வாழ்ந்திடும்
அம்மை காமாட்சி உமையே! 1

மாயவன் தங்கைநீ மரகத வல்லிநீ
மணிமந்திரக் காரிநீயே
மாயசொ ரூபிநீ மகேஸ்வரியு மானநீ
மலையரை யன்மக ளானநீ

தாயே மீனாட்சிநீ சற்குண வல்லிநீ
தயாநிதி விசா லாட்சிநீ
தரணியில் பெயர்பெற்ற பெரிய நாயகியும்நீ
சரவணனை ஈன்ற வளும்நீ
பேய்களுடனாடி நீ அத்தனிடபாகமதில்
பேர்பெற வளர்ந்த வளும்நீ
பிரணவ சொரூபிநீ பிரசன்ன வல்லிநீ
பிரியஉண் ணாமுலையும்நீ
ஆயிமகமாயி நீ ஆனந்தவல்லிநீ
அகிலாண்ட வல்லி நீயே
அழகான காஞ்சியில் புகழாக வாழ்ந்திடும்
அம்மை காமாட்சி உமையே. 2

## 10. குங்கும மகிமை

குங்கும மாவது குறைகளைத் தீர்ப்பது
குங்கும மாவது குடியினைக் காப்பது
குங்கும மாவது குணம தளிப்பது
குங்கும மாவது கொல்வினை தீர்ப்பது. 1

விதிதனை வெல்வது விமலையின் குங்குமம்
நிதிதனை ஈவது நிமலையின் குங்குமம்
பதிதனைக் காப்பது பதிவிரதை குங்குமம்
கதிதனை யாள்வதும் குங்கும மாமே. 2

தஞ்சமென்றோரைத் தடுத்தாண்டு கொள்வதும்
பஞ்ச மாபாதகம் பரிந்துமே தீர்ப்பதும்
அஞ்சின பேருக் கபய மளிப்பதும்
காஞ்சி காமாட்சியின் குங்கும மாமே. 3

நற்பத மீவது நாரணி குங்குமம்
பொற்பினை ஈவது பூரணி குங்குமம்
சிற்பரமாவது சிவகாமி குங்குமம்
கற்பினைக் காப்பதும் குங்கும மாமே. 4

செஞ்சுடர் போல்வது சீரான குங்குமம்
கொஞ்சு மழலைக் கொடுப்பது குங்குமம்
அஞ்சு புலன்க ளடக்கி யருள்வதும்
காஞ்சி காமாட்சியின் குங்கும மாமே. 5

நோயினைத் தீர்ப்பதும் நுண்ணறி வீவதும்
பேயினைத் தீர்ப்பதும் பெரும் புகழீவதும்
சேயினைக் காப்பதும் செல்வம் தருவதும்
தாயினை அர்ச்சித்த குங்கும மாமே. 6

சக்தி கொடுப்பதும் சத்தியம் காப்பதும்
பக்தி யளிப்பதும் பரகதி யீவதும்
முக்தி கொடுப்பதும் மும்மலம் தீர்ப்பதும்
சித்தி தருவதும் குங்கும மாமே. 7

நெஞ்சிற் கவலைகள் நீக்கி யருள்வதும்
செஞ்சொற் கவிபாடுஞ் சீரினை யீவதும்
வஞ்சப் பகைவரை வாட்டி யருள்வதும்
காஞ்சி காமாட்சியின் குங்கும மாமே. 8

சிவசிவ என்றுத் திருநீறணிந்த பின்
சிவகாமி யேயெனச் சிந்தித்தணிவதும்
தவமான மேலோருந்தரித்துக் களிப்பதும்
பவவினை தீர்ப்பதும் குங்கும மாமே. 9

எவையெவை கருதிடில் அவையவையீவதும்
நவவகை சக்தியின் நலனைக் கொடுப்பதும்
குவிசெய் கரத்துடன் கும்பிட்ட பேருக்குக்
குவிநிதி யீவதும் குங்கும மாமே. 10

அஷ்ட லட்சுமி அருள தளிப்பதும்
இஷ்டங்களீவதும் ஈடற்ற குங்குமம்
கஷ்டந் தவிர்ப்பதும் காத்தெனை யாள்வதும்
சிஷ்டராய்ச் செய்வதும் குங்கும மாமே. 11

குஷ்டம் முதலான மாரோகந் தீர்ப்பதும்
நஷ்டம் வராதொரு நலனைக் கொடுப்பதும்
எட்டும் இரண்டும் அறிவித்தோர் வீடினைக்
கிட்டவே செய்வதும் குங்கும மாமே. 12

பட்டகாலிலே படுமெனக் கஷ்டங்கள்
விட்டிடாமலே வந்துமே வாட்டினும்
பட்டான பார்வதி பாதம் பணிந்தே
இட்டார் இடர் தவிர் குங்கும மாமே. 13

சித்தந்தனைச் சுத்தி செய்வதற்கெளியதோர்
எத்துந் தெரியாத ஏமாந்த மாந்தரே
நித்தம் தொழுதன்னை குங்குமந்தன்னை
நித்தம் தரித்துமே வீடடை வீரே. 14

மிஞ்சும் அழகுடன் குங்கும ஆடைகொள்
செஞ்சுடராகுமோர் காஞ்சி காமாட்சியின்
கஞ்ச மலர் முகந்தன்னிற் றிகழ்வதும்
பஞ்ச நிதி தரும் குங்கும மாமே. 15



## 11. பராசக்தி சர்வ மங்கள ஸ்தோத்திரம்

அன்னை அன்னை அன்னை அன்பினுக்கு மங்களம்
ஆதிசக்தி அம்பிகைக்கு அனந்தகோடி மங்களம்
என்னுளே விளங்கும் எங்கள் ஈச்வரிக்கு மங்களம்
இச்சையாவும் முற்றுவிக்கும் சிற்சிலைக்கு மங்களம்.

உருகாத நெஞ்சம் உன்பால் உருகிற்றெவ் வுருக்கத்தாலும்
பெருகாத கண்ணீர் ஆறாய்ப் பெருகிற் பெருக்கால் முன்னம்
சருகான ஞானம் பூத்துத் தழைந்தின்பக் கனியாய்க் காணப்
பருகாத மதுரத் தேனைப் பருகினேன் பயன் பெற்றேனே.

எப்பிறப்பும் எய்தொணா இயற்கையான சித்தியை
இப்பிறப்பில் என்கரத் திசைந்தளிக்கும் சக்தியாம்
பஞ்ச பூத பேதமாய் பிரபஞ்சமாய் பிரசண்டமாய்
விஞ்சினாள் எனக்கு யோக வீறளித்த தன்மையால்

தாழ்விலாத தன்மையும் தளர்ச்சியற்ற வன்மையும்
வாழ்வினால் பயன்களும் என் வாக்கிலே வரங்களும்
பக்தியிற் கசிந்தலர்ந்து பாடுகின்ற பான்மையும்
பாடுவோர்க்கனேக போக பாக்கியங்கள் மேன்மையும்

என்றும் ஓங்க என் கரத்தியற்கையான சித்தியை
தந்து ஞானமூர்த்தியாய்த் தனித்து வைத்த சக்தியாம்
நாம கீர்த்தனம் பரந்து நாடெல்லாம் செழிக்கவும்
வேறிடாத இன்பம் பொங்கி வீடெலாம் விளங்கவும்

ஞான தீபமேற்றி யென்றும் நாமகீதம் பாடுவோம்
தர்ம சக்தி வாழ்கவென்று சந்ததம் கொண்டாடுவோம்.
(அன்னை)



## 12. தேவி கருமாரி அம்மன் ஸ்தோத்திரம்

கற்பூர நாயகியே கனகவல்லி
காளி மகமாயி கருமாரி அம்மா
பொற்கோவில் கொண்ட சிவகாமி அம்மா
பூவிருந்தவல்லி தெய்வயானை அம்மா
விற்கோல வேதவல்லி விசாலாட்சி
விழிக்கோல மாமதுரை மீனாட்சி
சொற்கோவில் நான் அமைத்தேன் இங்கு தாயே
சுடராக வாழ்விப்பாய் என்னை நீயே. (கற்பூர)

புவன முழுதும் ஆளுகின்ற புவனேச்வரி
புரம் எரித்தோன் புறம் இருக்கும் பரமேச்வரி
நவநவமாய் வடிவாகும் மாகேச்வரி
நம்பினவர் கைவிளக்கே ஸர்வேச்வரி
கவலைகளைத் தீர்த்துவிடும் காளீச்வரி
கார் இருளின் தீச்சுடரே ஜோதீச்வரி
உவமானப் பரம்பொருளே ஜகதீச்வரி
உன்னடிமை சிறியேனை நீ ஆதரி. (கற்பூர)

உன்னிடத்தில் சொல்லாமல் வேறு எந்த
உறவிடத்தில் முறையிடுவேன் தாயே எந்தன்
அன்னையாக நீ இருக்க உலகில் மற்ற
அன்னியரைக் கெஞ்சிடுதல் முறையோ அம்மா
கண்ணீரைத் துடைத்து விட ஓடிவா அம்மா
காத்திருக்க வைத்திடுதல் சரியோ அம்மா

சின்னவளின் குரல் கேட்டு உன்முகம் திருப்பு
சிரித்தபடி என்னைத்தினம் வழி அனுப்பு. (கற்பூர)

கண் இரண்டும் உன் உருவே காணவேண்டும்
கால் இரண்டும் உன் அடியே நாடவேண்டும்
பண் அமைக்கும் நா உனையே பாடவேண்டும்
பக்தியோடு கையுனையே கூப்பவேண்டும்
எண்ணம் எல்லாம் உன் நினைவே ஆகவேண்டும்
இருப்பதெல்லாம் உன்னுடையது ஆகவேண்டும்
மண்அளக்கும் சமயபுர மாரியம்மா
மகனுடைய குறைகளையும் தீரும் அம்மா! (கற்பூர)

நெற்றியிலுன் குங்குமமே நிறைய வேண்டும்
நெஞ்சினில் உன் திருநாமம் வழிய வேண்டும்
கற்றதெல்லாம் மேன்மேலும் பெருக வேண்டும்
கவிதையிலே உன் நாமம் வாழவேண்டும்
சுற்றம் எல்லாம் நீடுழி வாழ வேண்டும்
ஜோதியிலே நீ இருந்து ஆள வேண்டும்
மற்றதெல்லாம் நான் உனக்குச் சொல்லலாமா
மடிமீது பிள்ளை என்னைத் தள்ளலாமா? (கற்பூர)

அன்னைக்கு உபசாரம் செய்வதுண்டோ?
அருள் செய்ய இந்நேரம் ஆவதுண்டோ?
கண்ணுக்கு இமைஇன்றிக் காவல் உண்டோ?
கன்றுக்குப் பசுவின்றிச் சொந்தம் உண்டோ?
முன்னைக்கும் பின்னைக்கும் பார்ப்பதுண்டோ?
முழுமைக்கும் நீ எந்தன் அன்னையன்றோ?
எண்ணைக்கும் விளக்குக்கும் பேதமுண்டோ
என்றைக்கும் நான் உந்தன் பிள்ளையன்றோ? (கற்பூர)

அன்புக்கே நான் அடிமை ஆக வேண்டும்
அறிவுக்கே என்காது கேட்க வேண்டும்
வம்புக்கே போகாமல் இருக்க வேண்டும்
வஞ்சத்தை என் நெஞ்சம் அறுக்க வேண்டும்
பண்புக்கே உயிர்வாழ ஆசை வேண்டும்
பரிவுக்கே நான் என்றும் பணிய வேண்டும்

என்பக்கம் இவை எல்லாம் இருக்க வேண்டும்
என்னோடு நீ என்றும் வாழ வேண்டும். (கற்பூர)

கும்பிடவோ கை இரண்டும் போதவில்லை
கூப்பிடவோ நா ஒன்றால் முடியவில்லை
நம்பிடவோ மெய்தன்னில் சக்தி இல்லை
நடந்திடவோ கால் இரண்டால் ஆகவில்லை
செம்பவள வாய் அழகி உன் எழிலோ
சின்ன இரு கண்களுக்குள் அடங்கவில்லை
அம்பளவு விழியாளே உன்னை என்றும்
அடிபணியும் ஆசைக்கோர் அளவும் இல்லை. (கற்பூர)

காற்றாகிக் கனலாகிக் கடலாகினாய்
கருவாகி உயிராகி உடலாகினாய்
நேற்றாகி இன்றாகி நாளாகினாய்
நிலமாகிப் பயிராகி உணவாகினாய்
தோற்றாலும் ஜெயித்தாலும் வாழ்வாகினாய்
தொழுதாலும் அழுதாலும் வடிவாகினாய்
போற்றாத நாளில்லை தாயே உன்னைப்
பொருளோடும் புகழோடும் வைப்பாய் என்னை! (கற்பூர)



## 13. கற்பகவல்லி பாடல்

கற்பகவல்லி நின் பொற்பதங்கள் பிடித்தேன்
நற்கதி அருள்வாய் அம்மா – தேவி
பற்பலரும் போற்றும் பதிமயிலாபுரியில்
சிற்பம் நிறைந்த உயர் சிங்காரக் கோயில்கொண்ட (கற்பக...)

நீ இந்த வேளை தன்னில் சேயன் எனை மறந்தால்
நானிந்த நானிலத்தில் நாடுதல் யாரிடமோ
ஏனிந்த மௌனம் அம்மா ஏழை எனக்கருள
ஆனந்த பைரவியே ஆதரித்தாளும் அம்மா. (கற்பக...)

எல்லோர்க்கும் இன்பங்கள் எழிலாய் இறங்கி அருளும்
நல்லாக்கி வைத்திடும் நாயகியே நித்ய

கல்யாணியே கபாலி காதல் புரியும் – அந்த
உல்லாசியே உமா உனை நம்பினேனம்மா. (கற்பக...)

நாகேஸ்வரி நீயே நம்பிடும் எனைக் காப்பாய்
வாகேஸ்வரி மாயே வாராய் இது தருணம்
பாகேஸ்வரி தாயே பார்வதியே – இந்த
லோகேஸ்வரி நீயே உலகினில் துணையம்மா. (கற்பக...)

அஞ்சன மையிடும் அம்பிகையே எம்பிரான்
கொஞ்சிக் குலாவிடும் வஞ்சியே நின்னிடம்
தஞ்சம் என அடைந்தேன் தாயே உன்சேய் நான்
ரஞ்சனியே ரக்ஷிப்பாய் கெஞ்சுகிறேனம்மா. (கற்பக...)



## 14. சரஸ்வதி துதிப் பாடல்கள்

ஆயகலைகள் அறுபத்து நான்கினையும்
ஏயஉணர் விக்கும் என் அம்மை – தூய
உருப்பளிங்கு போல்வாள் என் உள்ளத்தின் உள்ளே
இருப்பள் இங்கு வாராது இடர். 1

வாணிகலைத் தெய்வம் மணிவாக் குதவிடுவாள்
ஆணிமுத்தைப் போலேஅறிவுமுத்து மாலையினாள்
காணுகின்ற காட்சியாய்க் காண்பதெல்லாங் காட்டுவதாய்
மாணுயர்ந்து நிற்பாள் மலரடியே சூழ்வோமே. 2

மானே! மடமயிலே! இசைபாடிடு குயிலே!
தேனே! நவமணியே! மிடி நோய்தவிர் தெள்ளமுதே
வானே! முதலெங்கு மாயவளே! இவ்வறுமையினி
நானே பொறுக்கலன் வந்தாள்! செந்தாமரை நாயகியே! 3

அன்பர்பால் நீங்கா வென் அம்மையே தாமரைமேல்
பொன்மருவு மேனியயன் பூவின் மன்பெரிய
வாக்கிறைவி நின்றாள் மலர்ச்சரணம் போன்றேனைக்
காக்கக் கடனுனக்கே காண். 4

படிக நிறமும் பவளச் செவ்வாயுங்
கடிகமழ் பூந்தாரை போற்கையும் – துடியிடையும்

அல்லும் பகலும் அனவரதமும் துதித்தால்
கல்லும் சொல்லாதோ கவி. 5

செந்தமிழ்ச் செல்வியைத் தாமரையாட்டியைத் தென்பொதியச்
சந்தனச் சோலை னேழிசை கூவுந் தனிக் குயிலைச்
சிந்தையிற் பூத்துச் செந்நாவிற் பழுத்துச் செவிப்புலத்தே
வந்து கனியும் பனுவற் பிராட்டியை வாழ்த்துவமே. 6

தம்பத நிலை நாடியோர் நாவுள் மலரும் கலை வாணியே
அம்ஸமதை வாகனமாய் கொண்டவளே ஸம்பவ
நிலையுள் மிளிரும் சகலகலா வல்லியே மலரடி தனை
எம்முள் பதித்தருள் வாயே பிரமன் நிலையுறு பூரணியே. 7

வாடும் பயிருக்கு மாமழை போலென் மலக்கொடுமை
ஓடும்படிக்கு கருணை சுரந்த உயர்குருவின்
தேடுந்திருவடி சிந்தையிற்கொண்டு செழுந்தமிழாற்
பாடும் பணிதந்த பாரதி பாதங்கள் பாடுவனே. 8

வெள்ளைக் கலையுடுத்து வெள்ளைப் பணி பூண்டு
வெள்ளைக் கமலத்து வீற்றிருப்பாள் – வெள்ளை
அரியாசனத்தில் அரசரோ டென்னைச்
சரியாக வைத்த தாயே! 9

நான்முகன் நாவின்மேவி நான்மறை வடிவாயின்னந்
தானரும் பொருள்கள் தேரத் தடக்கையின் முறையுந்தாங்கித்
தேனலர் கமலப் போதில் செழித்து வீற்றிருக்கும் அம்மே
கான்மலர் போற்றி நாளுங் கருத்துற வணக்கஞ்செய்வாம். 10

தெளிவுறவே யறிந்திடுதல் தெளிவுதர
மொழிந்திடுதல் சிந்திப் பார்க்கே
களிவளர யுள்ளத்தி லானந்தக் கனவுபல
காட்டல் கண்ணீர்த்
துளிவரஉள் ளுருக்குதல்இங் கிவையெல்லா
நீயருளுந் தொழில்க ளன்றோ?
ஒளிவருந் தமிழ்வாணீ, அடியேனற்கு
இவையனைத்தும் உதவு வாயே! 11

கலைபயின்ற வுளத்தினக்குங் கரும்பினை,
முக்கனியை, அருட்கடலை யோங்கும்
நிலைபயின்ற முனிவரருந் தொழுதேத்த
நான்முகனார் நீண்ட நாவின்
தலைபயின்ற மறைபயின்று, மூவுலகும்
காக்கின்ற தாயை, வாகைச்
சிலைபயின்ற நுதலாளைக் கலைவாணி
அம்மையை நாம் சிந்திப்போமே. 12

கையினில் வீணையும் கட்கமும் நூல் கொண்ட
கருணையின் வாணியுன்னை – என்றன்
மெய்யுருகப் பாடியே வேண்டுவேன் நித்தமும்
வெற்றியின் கொற்றமே வா – நெஞ்சில்
ஐயமும் நீங்கிவிட தெய்வமே கூத்தனூர்
ஆண்டிடும் அருள்விளக்கே – நான்
செய்வதொன்றும் அறியமாட்டேன் எத்தவறும்
செய்யாமல் காத்தருள்கவே. 13



*குமரகுருபர சுவாமிகள் அருளிய*

## 15. சகல கலாவல்லி மாலை

வெண்தா மரைக்கன்றி நின்பதம்
தாங்களென் வெள்ளை உள்ளத்
தண்தா மரைக்குத் தகாதுகொ
லோசகம் ஏழும்அளித்து
உண்டான் உறங்க ஒழித்தான்பித்
தாகஉண் டாக்கும் வண்ணம்
கண்டான் சுவைகொள் கரும்பே
சகல கலாவல்லியே. 1

நாடும் பொருள்சுவை சொல்சுவை
தோய்தர நாற்கவியும்
பாடும் பணியில் பணித்தருள்
வாய்பங்க யாசனத்தில்

கூடும் பசும்பொன் கொடியே
கனதனக் குன்றும்ஐம்பால்
காடும் சுமக்கும் கரும்பே
சகல கலாவல்லியே. 2

அளிக்கும் செழந்தமிழ்த் தெள்அமுது
ஆர்ந்துஉன் அருள்கடலில்
குளிக்கும் படிக்கென்று கூடுங்கொ
லோஉளங் கொண்டு தெள்ளித்
தெளிக்கும் பனுவல் புலவோர்
கவிமழை சிந்தக்கண்டு
களிக்கும் கலாப மயிலே
சகல கலாவல்லியே. 3

தூக்கும் பனுவல் துறைதோய்ந்த
கல்வியும் சொற்சுவைதோய்
வாக்கும் பெருகப் பணித்தருள்
வாய், வட நூற்கடலும்
தேக்கும் செழுந்தமிழ்ச் செல்வமும்
தொண்டர்செந் நாவினின்று
காக்கும் கருணைக் கடலே
சகல கலாவல்லியே. 4

பஞ்சப் பிதந்தரு செய்யபொன்
பாதபங் கேருகம்என்
நெஞ்சத் தடத்துஅல ராததுஎன்
னே! நெடுந் தாள்கமலத்து
அஞ்சத் துவசம் உயர்த் தோன்செந்
நாவும் அகமும்வெள்ளைக்
கஞ்சத் தவிசுஒத் திருந்தாய்
சகல கலாவல்லியே. 5

பண்ணும் பரதமும் கல்வியும்
தீஞ்சொல் பனுவலும்யான்
எண்ணும் பொழுதுஎளிது எய்தநல்
காய்! எழுதா மறையும்

விண்ணும் புவியும் புனலும்
கனலும்வெங் காலும் அன்பர்
கண்ணும் கருத்தும் நிறைந்தாய்
சகல கலாவல்லியே. 6

பாட்டும் பொருளும் பொருளால்
பொருந்தும் பயனும்என்பால்
கூட்டும் படிநின் கடைக்கண்நல்
காய், உளம் கொண்டு தொண்டர்
தீட்டும் கலைத்தமிழ்த் தீம்பால்
அமுதம் தெளிக்கும் வண்ணம்
காட்டும்வெள் ஓதிமப் பேடே
சகல கலாவல்லியே. 7

சொல்விற் பனமும் அவதான
மும்கவி சொல்லவல்ல
நல்வித்தை யும்தந்து அடிமைகொள்
வாய், நளி னாசனம்சேர்
செல்விக்கு அரிதுஎன்று ஒருகால
மும்சிதை யாமைநல்கும்
கல்விப் பெருஞ்செல்வப் பேறே
சகல கலாவல்லியே. 8

சொற்கும் பொருட்கும் உயிராம்மெய்ஞ்
ஞானத்தின் தோற்றம்என்ன
நிற்கின்ற நின்னை நினைப்பவர்
யார்நிலந் தோய்புழைக்கை
நற்குஞ் சரத்தின் பிடியோடு
அரசன்னம் நாணநடை
கற்கும் பதாம்புயத் தாயே
சகல கலாவல்லியே. 9

மண்கண்ட வெண்குடைக் கீழாக
மேற்பட்ட மன்னரும்என்
பண்கண் டளவில் பணியச்செய்
வாய்படைப் போன்முதலாம்

விண்கண்ட தெய்வம்பல் கோடியுண்
டேனும் விளம்பில்உன்போல்
கண்கண்ட தெய்வம் உளதோ
சகல கலாவல்லியே. 10

*குமரகுருபர சுவாமிகள் அருளிய*
*சகல கலாவல்லி மாலை முற்றிற்று.*



## 16. வாணி சரஸ்வதி பாடல்

மாணிக்க வீணையேந்தும் மாதேவி கலைவாணி
தேன்தமிழ் சொல்லெடுத்துப் பாட வந்தோம் – அம்மா
பாட வந்தோம் அம்மா பாட வந்தோம்
அருள்வாய் நீ இசை தர வா நீ
இங்கு வருவாய் நீ நலம் தருவே நீ – அம்மா (மாணி...)

நா மணக்கப் பாடி நின்றால் ஞானம் வளர்ப்பாய்
பூ மணக்கப் பூஜை செய்தால் பூவை நீ மகிழ்வாய்
(மாணி...)

வெள்ளைத் தாமரையில் வீற்றிருப்பாய் எங்கள்
உள்ளக் கோயிலிலே உறைந்திருப்பாய்
கள்ளமில்லாமல் தொழும் அன்பருக்கே என்றும்
அள்ளி அறிவைத் தரும் அன்னையும் நீயே

வாணி சரஸ்வதி மாதேவி
பாரதி வாகீஸ்வரி மாலினி
காணும் பொருளில் தோன்றும் கலைமணி
வேண்டும் வரம் தரும் தேவி நீ
நான்முகன் நாயகி மோகன ரூபிணி
நான்மறை போற்றிடும் தேவி நீ
வானவரமுதே தேனருள் சிந்தும்
ராக மனோகரி கல்யாணி

அருள்வாய் நீ இசை தர வா நீ
இங்கு வருவாய் நீ நலம் தருவே நீ – அம்மா (மாணி...)



# இதர தெய்வ ஸ்தோத்திரங்கள்

## 1. ஆஞ்சநேயர் துதிப் பாடல்கள்

அஞ்சிலே ஒன்று பெற்றான் அஞ்சிலே ஒன்றைத் தாவி
அஞ்சிலே ஒன்று ஆறாக ஆருயிர் காக்க ஏகி
அஞ்சிலே ஒன்று பெற்ற அணங்கைக்கண்டு அயலார் ஊரில்
அஞ்சிலே ஒன்று வைத்தான் அவனெம்மை அளித்துக் காப்பான்.

எவ் இடத்தும் இராமன் சரிதையாம்
அவ் இடத்திலும் அஞ்சலி அத்தனாய்
பவ்வ மிக்க புகழ்த்திருப் பாற்கடல்
தெய்வ தாசனைச் சிந்தை செய்வாம்அரோ.

அஞ்சனை மைந்தா போற்றி! அஞ்சினை வென்றாய் போற்றி!
வெஞ்சினக் கதிர்பின் சென்று பிழுமறையுணர்ந்தாய் போற்றி!
மஞ்சன மேனி ராமன் மலர்ப்பதம் மறவாய் போற்றி!
எஞ்சலில் ஊழியெல்லாம் இன்றென விருப்பாய்! போற்றி!

சுந்தர வில்லியேவ, சூழ்கடல் இலங்கை மேவி
அந்தமில் வீடு நல்கும் ஆயிழைத் தன்னைக் கண்டு
வந்தவெவ் வரக்கர் சிந்தி வளையெரி மடுத்து மீண்ட
நந்தலில் லாத தூதன் நம்மையும் அளித்துக் காப்பான்.

அஞ்சனைப் பெற்றெடுத்த அருந்தவப்புதல்வன் செல்வன்
செஞ்சுடர் குலத்துதித்த சிலையணிராமன் தூதன்
வஞ்சகர் தமையடக்கி வணங்கிடும் அன்பர்கென்றும்
அஞ்ச லென்றருளும் வீரன் அனுமனைப் போற்றுவோமே.

அன்னைகை மோதிரத்தை அளித்தலும் மணியைத் தந்து
இன்னெடும் கடலைநீயும் எங்ஙனம் கடந்தாய், என்ன
உன்னத நெடியமாலாய் உயர்ந்தெழுந் தடங்கி நின்று
மன்னுதாய் ஆசிபெற்ற மாருதிபாதம் போற்றி!

சொல்லுரம் பெற்ற சோர்விலா தூயவீரன்
வல்லவன் ராமன்சீதை வாயுறைபெற்ற அன்பன்

அல்லலைப்போக்கிக் காக்கும் அனுமனைப் பாடுங்காலை
கல்லினைப் பெண்ணாய்ச் செய்தான் கழலிணைப்
போற்றுவோமே.



### திருஞானசம்பந்தர் அருளிய

## 2. கோளறு திருப்பதிகம்

வேயுறு தோளி பங்கன் விடமுண்ட கண்டன்
மிக நல்ல வீணை தடவி
மாசறு திங்கள் கங்கை முடிமே லணிந்தென்
உளமே புகுந்த அதனால்
ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழன்
வெள்ளி சனி பாம்பிரண்டு முடனே
ஆசறு(ம்) நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியாரவர்க்கு மிகவே. 1

என்பொடு கொம்பொடாமை யிவை மார்பி லங்க
எருதேறி ஏழையுடனே
பொன்பொதி மத்தமாலை புனல்சூடி வந்தென்
உளமே புகுந்த அதனால்
ஒன்பதொ டொன்றோ டேழுபதி னெட்டோடாறும்
உடனா யநாள்க ளவைதாம்
அன்பொடு நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியாரவர்க்கு மிகவே. 2

உருவளர் பவளமேனி யொளிநீ றணிந்து
உமையோடும் வெள்ளை விடைமேல்
முருகலர் கொன்றை திங்கள் முடிமேலணிந்தென்
உளமே புகுந்த அதனால்
திருமகள் கலையதூர்தி செயமாது பூமி
திசை தெய்வமான பலவும்
அறநெறி நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியாரவர்க்கு மிகவே. 3

மதிநுதல் மங்கையோடு வடபாலிருந்து
மறையோ துமெங்கள் பரமன்
நதியோடு கொன்றை மாலைமுடி மேலணிந்தென்
உளமே புகுந்த அதனால்
கொதியுறு காலனங்கி நமனோடு தூதர்
கொடுநோய் களான பலவும்
அதிகுணம் நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியாரவர்க்கு மிகவே. 4

நஞ்சணி கண்டெனந்தை மடவாள் தனோடும்
விடையேறு நங்கள் பரமன்
துஞ்சிருள் வன்னி கொன்றை முடிமேலணிந்தென்
உளமே புகுந்த அதனால்
வெஞ்சின அவுணரோடு முருமிடியுமின்னு
மிகையான பூத மவையும்
அஞ்சிடு(ம்) நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியாரவர்க்கு மிகவே. 5

வாள்வரி யதள தாடைவரி கோவணத்தர்
மடவாள் தனோடு முடனாய்
நாள்மலர் வன்னி கொன்றை நதிசூடிவந்தென்
உளமே புகுந்த அதனால்
கோளரியுழு வையோடு கொலையானை கேழல்
கொடுநாக மோடு கரடி
ஆளரி நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியாரவர்க்கு மிகவே. 6

செப்பிள முலைநன் மங்கை யொருபாகமாக
விடையேறு செல்வனடைவார்
ஒப்பிள மதியு மப்பு முடிமேலணிந்தென்
உளமே புகுந்த அதனால்
வெப்பொடு குளிரும் வாதம் மிகையானபித்தும்
வினையான வந்து நலியா
அப்படி நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியாரவர்க்கு மிகவே. 7

வேள்பட விழிசெய் தன்று விடைமேலிருந்து
மடவாள் தனோடு முடனாய்
வாண்மதி வன்னி கொன்றைமலர் சூடிவந்தென்
உளமே புகுந்த அதனால்
ஏழ்கடல் சூழிலங்கை யரையன் றனோடும்
இடரான வந்து நலியா
ஆழ்கடல் நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியாரவர்க்கு மிகவே. 8

பலபல வேடமாகும் பரனாரி பாகன்
பசுவேறு மெங்கள் பரமன்
சலமகளோ டெருக்கு முடிமேலணிந்தென்
உளமே புகுந்த அதனால்
மலர் மிசையோனுமாலு மறையோடு தேவர்
வரு காலமான பலவும்
அலைகடல் மேரு நல்ல அவை நல்ல நல்ல
அடியாரவர்க்கு மிகவே. 9

கொத்தலர் குழலியோடு விசையற்கு நல்கு
குணமாய வேட விகிர்தன்
மத்தமும் மதியுநாக முடிமேலணிந்தென்
உளமே புகுந்த அதனால்
புத்தரோ டமணைவா திலழிவிக்கும் அண்ணல்
திருநீரு செம்மை திடமே
அத்தகு நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியாரவர்க்கு மிகவே. 10

தேனமர் பொழில் கொளாலை விளைசெந் நெல்துன்னி
வளர் செம்பொன் எங்கு(ம்) திகழ
நான்முக னாதியாய பிரமாபுரத்து
மறைஞான ஞான முனிவன்
தானுறு கோளும் நாளும் அடியாரை வந்து
நலியாத வண்ணம் உரை செய்

ஆனசொன் மாலையோதும் அடியார்கள் வானில்
அரசாள்வர் ஆணை நமதே. 11



## 3. நவக்கிரகப் பாடல்கள்

### சூரியன்

சீலமாய் வாழச் சீரருள் புரியும்
ஞாலம் புகழும் ஞாயிறே போற்றி
சூரியா போற்றி சுதந்திரா போற்றி
வீரியா போற்றி வினைகள் களைவாய்.

### சந்திரன்

எங்கள் குறைகள் எல்லாம் தீர்க்கும்
திங்களே போற்றி திருவருள் தருவாய்
சந்திரா போற்றி சத்குரு போற்றி
சங்கடந் தீர்ப்பாய் சதுரா போற்றி.

### அங்காரகன் (செவ்வாய்)

சிறப்புறு மணியே செவ்வாய்த் தேவே
குறையிலா தருள்வாய் குணமுடன் வாழ
மங்களச் செவ்வாய் மலரடி போற்றி
அங்காரகனே அவதிகள் நீக்கு.

### புதன்

இதமுற வாழ இன்னல்கள் நீக்கு
புத பகவானே பொன்னடி போற்றி
பதந்தந் தாள்வாய் பண்ணொலியானே
உதவியே யருளும் உத்தமா போற்றி.

### குரு

குணமிகு வியாழக் குரு பகவானே
மனமுடன் வாழ மகிழ்வுடனருள்வாய்
பிருகஸ்பதி வியாழப் பரதகுரு நேசா
கிரகதோஷ மின்றிக் கடாக்ஷித்தருள்வாய்.

### சுக்கிரன்

சுக்கிரமூர்த்தி சுபமிக யீவாய்
வக்கிரமின்றி வரமிகத் தருவாய்
வெள்ளிச் சுக்கிர வித்தக வேந்தே
அள்ளிக் கொடுப்பாய் அடியார்க்கருளே.

### சனி

சங்கடந் தீர்க்கும் சனி பகவானே
மங்களம் பொங்க மனம் வைத்தருள்வாய்
சச்சரவின்றிச் சாகா நெறியில்
இச்சகம் வாழ இன்னருள் தா தா.

### ராகு

அரவெனும் ராகு அய்யனே போற்றி
கரவா தருள்வாய் கஷ்டங்கள் நீக்கி
ஆகவருள் புரி அனைத்திலும் வெற்றி
ராகுக்கனியே ரம்மியா போற்றி.

### கேது

கேதுத் தேவே கீர்த்தித் திருவே
பாதம் போற்றி பாபம் தீர்ப்பாய்
வாதம் வம்பு வழக்கு களின்றி
கேதுத் தேவே கேண்மையாய் ரக்ஷி.



